## தனித்தன்மை வாய்ந்த
## இவரது தணியாத விருப்பம்
## 'ப்ளெயின்' ஷர்ட்டிங் மட்டும் அணிவதே

### அதாவது ம:பத்லால் வழங்கும் பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர் ப்ளெண்டுகளின் ஷர்ட்டிங்.

அவருக்கென ஒரு தனி பாணி, தனி ரசனை.
பறைசாற்றமாட்டார், என்றும் பவ்வியமாக இருப்பார்.
தனக்கே உரிய தனித் தோற்றத்தை வலியுறுத்துவார்.

**ம:பத்லால் ஷர்ட்டிங்**



MF-118-TAM

# பெண்கள் இதிலுமா தனியாக நிற்க வேண்டும்?

தமிழ்நாடு அரசாங்க பெண் ஊழியர்களின் தொழிற்சங்கம் ஒன்று திருமதி. **லலிதா கோபாலகிருஷ்ணன்** அவர்களைத் தலைவியாகவும், **திருமதி சரோஜா சேகரன்** அவர்களை உபதலைவியாகவும், **திருமதி கண்ணம்மாள்** அவர்களைக் காரியதரிசியாகவும் கொண்டு தொடங்கப்பட்டிருப்பதாக பத்திரிகைச் செய்தி. இச்சங்கத்தின் நோக்கங்கள்: (1) பெண் ஊழியர்கள் சுரண்டப்படுவதைத் தவிர்த்தல். (2) வரதட்சிணைக் கொடுமையை ஒழிக்கப் பாடுபடுதல். (3) அரசாங்க ஊழியத்தில் திறமையையும், நேர்மையையும் கொண்டு வருதல்.

ரிசர்வ் வங்கியின் அதிகாரிகள் சங்கத்தில பத்தாண்டுகளுக்கும் மேலாகக் காரியதரிசியாகவும், உபதலைவராகவும், தலைவராகவும் பணியாற்றியவன் என்ற முறையிலும், அலுவலக ஊழியர்களின் தொழிற்சங்க வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டவன் என்ற முறையிலும் இச்செய்தி எனக்குப் பெரிதும் வருத்தத்தையளிக்கிறது.

தொழிற்சங்கத்தின் முக்கிய நோக்கம் தனது அங்கத்தினர்களின் உரிமைகளுக்காகவும், அவர்களது தொழில் நலன்களை (Conditions of Working)ப் பெருக்கவும் பாடுபடுவதே. ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் என்ற எண்ணமும், தொழிற்சங்கங்களிடையே போட்டியை ஒழித்து ஊழியர்களின் bargaining சக்தியை அதிகரிக்க வேண்டும் என்னும் எண்ணமும் வளர்ந்து வரும் இந்நாளில் பெண் ஊழியர்கள் தங்களுக்கென ஒரு தனிச்சங்கம் அமைத்துக் கொள்வது சிறிதும் வரவேற்கத் தக்கதல்ல.

இன்று தமிழ்நாடு அரசாங்க ஊழியர்களிடையே தோன்றியிருக்கும் இந்தப் பிரிவினை மனப்பான்மை சிறிது சிறிதாக, வங்கிகள், ஆயுள் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன், மற்ற அரசாங்கக் கட்டுப்பாட்டுக்குட்பட்ட நிறுவனங்களுக்கும் பரவக் கூடும். அப்படிப் பரவுவதற்கு முன்னர் இந்த அபாயகரமான போக்கை முளையிலேயே கிள்ளியெறியத் தொழிலாளர் நலனில் அக்கறை கொண்டுள்ள யாவரும் முனைய வேண்டும்.

பெண் ஊழியர்களுக்கு எதற்காகத் தனி சங்கம்?

சம்பளமோ, பஞ்சப்படியோ, மற்ற அலவன்சுகளோ ஆண் ஊழியர்களுக்கு அளிக்கப்படுவது போலத்தானே பெண் ஊழியர்களுக்கும் அளிக்கப்படுகிறது?

வைத்திய வசதி, லீவ், எல். டி. சி. போன்ற வசதிகளும் இருபாலாருக்கும் ஒன்று போலத்தானே கிடைத்து வருகின்றன? பார்க்கப் போனால் பெண் ஊழியர்களுக்குக் கிடைக்கும் பிரசவ கால விடுமுறை வசதி ஆண்களுக்குக் கிடையாது.

உத்தியோக உயர்விலும் ஆண்–பெண் வித்தியாசம் பாராட்டப்படுவதில்லை.

மாற்றல் விஷயத்திலும் பெண் ஊழியர்கள் ஆண் ஊழியர்களை விட நல்ல முறையிலேயே கருணையுடன்தான் நடத்தப் படுகிறார்கள்.

'சுரண்டப்படுதல்' என்று வரும்போது நிர்வாகம் (அரசாங்கமானாலும், தனியார் துறையானாலும்) ஆண் ஊழியர்களையும், பெண் ஊழியர்களையும் வித்தியாசம் பாராட்டாமல் சுரண்டத்தான் செய்கிறது. ஆண் ஊழியர்கள் பெண் ஊழியர்களைச் சுரண்டுகிறார்கள் என்று சரித்திரம் கிடையாது. சில ஆண் அதிகாரிகள் பெண்


தலைவி
லலிதா கோபாலகிருஷ்ணன்


உபதலைவி
சரோஜாசேகரன்


காரியதரிசி
கண்ணம்மாள்

ஊழியர்களிடம் முறை தவறி நடக்கும் போதோ, மிரட்டும் போதோ கடினமான வார்த்தைகளை உபயோகிக்கும் போதோ அந்தப் பெண் ஊழியர்களைப் பாதுகாக்கவும் தவறு செய்த ஆண் அதிகாரிகளையோ, சீனியர் ஊழியர்களையோ கண்டிக்கவும் தொழிற்சங்கங்கள் செயல்படத்தான் செய்கின்றன.

வரதட்சிணைக் கொடுமையை ஒழிக்க சமூக சங்கங்கள் எவ்வளவோ இருக்கின்றன. அரசாங்க ஊழியர்கள் சங்கம் அதற்குத் தேவை இல்லை. தேவை இல்லாததோடு மட்டுமல்ல, தொழிற்சங்கம் தனது சக்தியைத் தனக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் விரயமாக்கக் கூடாது. வரதட்சிணையை அரசாங்கமா கேட்கிறது? நிர்வாகமா கேட்கிறது? அரசாங்கத்துடனும், நிர்வாகத்துடனும் போட வேண்டிய சண்டை வேறு. நடத்த வேண்டிய போராட்டம் வேறு. வரதட்சிணைக் கொடுமைக்கும் ஒரு தொழிற்சங்கத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமும் கிடையாது.

அரசாங்க ஊழியத்தில் நேர்மையையும் திறமையையும் கொண்டு வருவதில் பெண் ஊழியர்களுக்கு எவ்வளவு அக்கறை இருக்கிறதோ (அல்லது இருக்க வேண்டுமோ) அவ்வளவு அக்கறை ஆண் ஊழியர்களுக்கும் இருக்கிறது (அல்லது இருக்க வேண்டும்.).

ஆகமொத்தம், எந்தக் காரணம் கொண்டும் பெண் ஊழியர்களுக்குத் தனித்தொழிற் சங்கங்கள் தேவை இல்லை. எவ்வளவுதான் நாம் சமூகப் பழக்க வழக்கங்களில் முன்னேறினாலும், பெண்கள் ஆண்களோடு சரிநிகர் சமானமாக எல்லாத் துறைகளிலும் பங்கேற்றாலும், பல பெண்களுக்கு இன்னும் ஒரு வகைத் தாழ்வு மனப்பான்மை இருந்து கொண்டே இருப்பது தான் இதுபோன்ற அமைப்புகள் தோன்றக் காரணம். ஆண்களும், பெண்களும் கலந்த தொழிற்சங்கங்களில் தலைவர், காரியதரிசி போன்ற பதவிகளை அடைய முடியாத சில பெண்களின் ஏமாற்றமும் காரணமாக இருக்கலாம்.

தொழிற்சங்கத் தலைவர்கள் தங்கள் கவனத்தை இந்தப் போக்கின் பால் திருப்பி, இதனால் விளையக் கூடிய கேடுகளைச் சிந்தித்துச் செயல்படுவார்கள் என்று நம்புகிறேன்.

—ஹேமா ஆனந்ததீர்த்தன்

புகைப்படங்கள்: சுபா

# காய்கறியோ சிரியோ



● பிரின்ஸ்பால்: நீங்க யார், என்ன விஷயம்?
வந்தவர்: நான் காய்கறி வியாபாரிங்க. என் மகனுக்கு....
பிரின்ஸ்பால்: அடடே, உட்காருங்கோ உட்காருங்கோ....

● ராதா: சீதா ஏன் சோகமா இருக்கே?
சீதா: என் மாமியார் காய்கறிகளை என் பொறந்த வீட்டிலேர்ந்து கொண்டு வான்னு தினமும் நச்சரிக்கிறா.

—ஒப்பிலி அப்பன்

● மனைவி: இப்ப நான் என்ன கேட்டுட்டேன்னு முகத்தைத் திருப்பிக்கிறீங்க. தகையா நட்டா ஒரு கிலோ கோஸ் தானே கேட்டேன்.

● மகன்: அப்பா, பச்சைத் தக்காளியை அப்படியே சாப்பிட்டா உடம்புக்கு நல்லதுதானே?
தந்தை: பாடத்திலே சந்தேகம் கேட்பது போல இப்படி எதையாவது சொல்லி எரிச்சலைக் கிளப்பினே பிச்சிப் பிடுவேன் பிச்சி.



# நல்லன செய்வோம் நலம் பெறுவோம்

பிராணிகள் நல்லன, தீயன காரியங்கள் மூலமாக இங்கேயே சந்தோஷமும், துன்டமும் பெறுகின்றன. நல்ல ஆகாரத்தை உட்கொள்வதன் மூலம் சந்தோஷமடையும். பிறருடைய தோட்டத்தில் மேய்வதன் மூலம் கல்லடிபட்டுத் துன்பமடையும். ஆனால். புண்யபாவம் ஒன்றும் அதன் செயலுக்குக் கிடையாது. மனிதன் செய்யக்கூடிய ஒவ்வொரு செயலுக்கும், இப்பொழுதும் சுக துக்கங்கள் உண்டு. பின்னாலும் சுக துக்கங்கள் உண்டு. இப்பொழுது நல்ல காரியத்தைச் செய்தால் புகழ்வார்கள். கெட்ட காரியம் செய்தால் இகழ்வார்கள். எத்தனை நல்ல காரியங்கள் செய்தாலும் நமக்கு வேண்டாதவர்கள் இருந்தால் இகழ்வார்கள். அப்படி நல்ல காரியம் செய்பவர்களை வேண்டாதவர்கள் இகழ்ந்தாலும் இகழ்பவர்க்கே பாபம் உண்டாகும். ஆகவே மனிதனின் ஒவ்வொரு செயலுக்கும் ஏற்றவாறு புண்ணியமோ, பாவமோ, நல்வினையோ தீவினையோ கட்டாயம் வந்து சேரும்.

பிராணிகள் ஒவ்வொரு அறிவினால், தான் — பந்தப்படுகின்றன. மான் அருமையான புல்லாங்குழல்கானத்தைக் கேட்டு பந்தப்படுகிறது. விட்டில் பூச்சி ஒளியைப் பார்த்து அதன் அழகைக் கண்டு பந்தப்படுகிறது. மீன் ருசியினால் தூண்டிலில் அகப்பட்டுக் கொண்டு பந்தப்படுகிறது. யானை பெண் யானை ஸ்பரிசத்தை விரும்பி பந்தப்படுகிறது. வண்டு தாமரை மலரில் உள்ள மகரந்தத்தை நுகர்வதினால் பந்தப்படுகிறது. இப்படி ஒவ்வொரு உறுப்பினால் ஒவ்வொரு உயிரினம் பந்தப்படும் பொழுது ஐம்புலன்களாலும் பந்தப்படும் மனிதன் துன்பப்படுவதிலும் ஆச்சரியமில்லை. ஆனால் ஆறுவது அறிவைப் பெற்ற மனிதன் அந்த விவேக சக்தியின் மூலமாகத் துன்பத்திலிருந்து மீளுவது தான் மனித வாழ்வின் லட்சியம். பகுத்தறிவு படைத்ததின் பயன். மனித வாழ்வில் செய்யக்கூடிய தவறுகளுக்கு மன்னிப்புப் பெறவும் இனித் தவறு செய்யாதிருக்க மனவலிமையைப் பெறவும் இறைவழிபாடு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. தவறுக்கு வருந்தி உருகி பிரார்த்திக்கும் போது இறைவனிடம் இயற்கையாய் உள்ள அருள் தன்மை காரணமாக பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. மறுபடி பாவம் செய்யாதிருக்க மனோபலத்தையும்அதே இறைவழிபாடு நமக்கு அளிக்கிறது. தவறுகள் செய்து பாபமூட்டையைச் சுமக்காதவர்கள் பிறவியே இல்லாத ஒருநிலையைப் பெறக் கூடிய வாய்ப்பும் மனிதப் பிறவிக்கே ஏற்பட்டுள்ளது. இதைவிடப் பெரிய நலன் ஏது? எனவே, நாம் நல்லவர்களாய் வாழ்ந்து நல்லன நினைத்து நல்லன செய்வோம். நலமெல்லாம் பெறுவோம்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



## கடிதங்கள்

● 10-7-83 இதழில் ஓவியர் ரங்கநாதன் என்பவரை அறிமுகப்படுத்தியுள்ளீர்கள். பாராட்டத் தகுந்த ஒன்று. ஆனால் திரு ரங்கநாதன் வரைந்த ஓவியம் ஏற்கனவே தினமணி கதிரில் ஓவியர் கோபுலு அவர்களால் 'குறளோவியம்' எனும் தொடர் கட்டுரைக்கு வரையப்பட்டதாகும். இத்துடன் கோபுலு அவர்கள் வரைந்த அப்படத்தையும் இணைத்துள்ளேன். இனிமேலாவது ஒரிஜினல் கற்பனைத் திறன் கொண்டவர்களை அறிமுகப்படுத்துங்கள்.
சென்னை கே. என். வெங்கி

● செவியைப் பற்றி விளக்கமாக மருத்துவ நிபுணர் கே. கே. இராமலிங்கத்திடம் பேட்டி பயனுள்ள பணி.
கரூர்-2 கே. என். இராமகிருஷ்ணன்

● ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி வழங்கிய ''ஐந்தின் பெருமை''யைப் படித்தபோது தெய்வ மணம் வீசியது.
கும்பகோணம்-1 திருமதி பிரசன்ன ராஜன்

● ஒரு துணுக்குக்கு ரூ. 125ஐ சன்மானமாக வழங்கிய கல்கிக்கும் துணுக்கை எழுதிப் பரிசு பெற்ற லலிதா செல்லப்பா அவர்களுக்கும் மனம் நிறைந்த பாராட்டுக்கள்.
கோயமுத்தூர் தி. சுந்தரேசன்

● 'பனார்' தலைடங்கம் ஆணவ அரசியலை எண்ணிக் கோபத்தை ஏற்படுத்திய நேரத்தில் அதன் நையாண்டி நடை சிரிப்பையும் உருவாக்கியது.
விருதுநகர் மங்களம்

● கார்ட்டூனிஸ்ட் உமாபதியின் மூலம் செயற்கை மழையில் அளவுக்கு மீறி நனைந்து விட்டதால் எனக்கு 'ஜலதோஷமே' பிடித்து விட்டது.
திருப்பூர்-1 எஸ். ரமேஷ்குமார்

● அமைச்சர் என்று அறிந்தபோது பேட்டி எதிர்பாராத விருந்து.
பல்லாவரம் ப. பழனி

● விளையாட்டுக் களைப்பினால் நெற்றியில் ஏற்பட்டிருக்கும் சிறு சிறு வியர்வைத் துளிகளுடனும், வெற்றிப் பெருமிதத்தில் முகத்தில் உண்டாகியிருக்கும் சிறு புன்னகையுடனும் எடுக்கப் பட்டிருந்த கபிலின் புகைப்படம் அற்புதம்.
நெல்லிக்குப்பம் —ரா. ஜோதிராமன்

● கல்பாக்கம் அணுமின் நிலையத்தினைப் பற்றி எழுதப்பட்ட கட்டுரை ஒரு சிறிய ஆய்வுக் கட்டுரையாய் இருந்தது.
திருச்சி-14 எஸ். முரளி

● தெய்வ தரிசனம் கட்டுரையும், பக்கத்திற்குப் பக்கம் இடம் பெற்றுள்ள பக்தித் துணுக்குகளும் மனத்தினுள் ஒரு தெய்வீக உணர்வை ஏற்படுத்தி விட்டன!
அரவக்குறிச்சிப்பட்டி —எம். அசோக்ராஜா.

● 'புயலில் சிக்கிய புல்' சிறுகதை புத்தனை மேய நினைக்கும் புலிகளுக்கு ஒரு பிரம்படியாகும்.
நீடாமங்கலம் திருமதி சுப்பிரமணியன்




● காரைக்கால் அம்மையார் பற்றிய ஆனந்தியின் கட்டுரை படித்தவுடன் ஒரு நடை திருவாலங்காடு போவதாகத் தீர்மானித்து விட்டேன்.
சென்னை-45 கே.எஸ்.கணபதி சுப்பிரமணியம்

● சரிதாவின் வழக்கும் தீர்ப்பும் பற்றிய விரிவான கட்டுரை கண்டேன். நீதிபதி சௌத்ரிக்கு இந்துப் பெண்களின் சார்பில் பாராட்டுச் சொல்வோம்!
செங்கவல்லி —வாசுகி.

## நேற்று இன்று நாளை

ஒருத்தி: நேற்று வரைக்கும் எரிந்துவிழுந்து பேசிக்கிட்டு இருந்த உன் கணவர் இப்போது எப்படி இவ்வளவு உருக்கமாகப் பேசுகிறார்?

இன்னொருத்தி: நேற்றுவரை தீப் பெட்டி வியாபாரம் செய்துக்கிட்டு இருந்த அவர் இன்று முதல் ஐஸ் வியாபாரம் செய்கிறார்.

—ஆர். பி. திருஞானம்



# ஷா வாலஸ் வழங்கும்




## அழுக்கைத் தகர்த்திடும்

## துணிகளைக் காத்திடும்

ரீகலின் அபார சலவை சக்தி. உங்கள் துணிகளில் விடாப்பிடியாகப் படிந்திருக்கும் அழுக்கைத் தகர்த்து விரட்டுகிறது. உங்கள் துணிகளை அதி வெண்மையாகவும் பளிச்சென்றும் சலவை செய்கிறது.

மேலும் ரீகலின் பாதுகாப்பான சலவை உங்கள் துணிகளுக்கு இதமானது. மென்மையானது... புதுமையான நறுமணத்துடன் கூட.

அறிமுகச் சலுகை 25பை. தள்ளுபடி.

ACIL.0592.83 Tam






Shaw Wallace

ஷா வாலஸின் தரமான தயாரிப்பு.




நான் ஒண்ணும் (இ) காங்கிரஸ்
பக்கம் சாயப் போவதில்லே!



அன்னை இந்திரா 365 நாட்களும் வாழ்க!..
காமராஜ் பிறந்த நாளில் மட்டும் வாழ்க!...
ராஜீவ்
பழனி யாண்டி
சிவாஜி



அரசு -
ஊழியர்கள்
வேலைநிறுத்தம்
நிர்வாகச்
சீர்திருத்தங்கள்
ராமராஜ்

# கல்கி



1983 ஜூலை 31
ருத்ரோத்காரி ஆடி 15
மலர் : 41 இதழ் : 53




# பெருந்தலைவருக்கு மாபெரும் விழா

பெருந்தலைவர் காமராஜருக்குத் திருச்சியிலும் சென்னையிலும் மாபெரும் விழாக்கள் நடந்தேறின. 'ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்' என்று காமராஜரால் வர்ணிக்கப்பட்ட கட்சிகளுள் ஒன்றான அ. தி. மு. க. வின் தலைவர் எம். ஜி. ஆர். சென்னையில் சிலைத் திறப்புவிழா நடத்தினார்! எமெர்ஜென்ஸி அறிவித்துக் காமராஜரின் இதயத்தை உடைத்த இந்திராகாந்தியின் மகன் ராஜீவ் திருச்சியில் கடலலைய மக்கள் திரண்டிருந்த கூட்டத்தில் காமராஜரின் பெருமைகளைப் பேசினார். இதைக்கண்டு நாம் நகைக்கவும் வேண்டாம்; விசனிக்கவும் அவசியமில்லை. சரித்திரத்தில் இதுபோன்ற விசித்திரங்கள் சகஜம். ஒருவர் வாழ்கின்ற வரையில் கொள்கை ரீதியாக எதிர்த்தவர்கள் அப்பெருந்தலைவர் காலமான பிறகு கருத்து மாறுபாடுகளை ஒதுக்கி அவரிடமிருந்த சிறப்பியல்புகளைப் பற்றி மட்டுமே பேசுவது இயற்கை. அபிப்பிராய பேதங்கள், தனி மனிதர்களிடையே பரஸ்பரம் நிலவ வேண்டிய நன்மதிப்புக்கு இடையூறாக அவசியமில்லை.

காமராஜரின் கொள்கைகளைப் பலர் ஏற்காமல் போகலாம், ஆனால், அவரிடமிருந்த அடிப்படையான தார்மீகப் பண்புகள் உலக முழுவதற்கும் பொதுவானவை; நிரந்தர மதிப்புடையவை. இந்தச் சிறப்பியல்புகளைப் பட்டியல் போடும் தலைவர்கள் அதன்படி தாமும் நடந்து கொண்டு நாட்டையும் நடத்திச் செல்கிறார்களா என்பதே கேள்வி; முக்கியமான கேள்வி.

காமராஜர் காலமான சமயம் ''வீட்டிலிருக்கும் பணம் மற்ற மதிப்பு மிக்க பொருள்களை ஓர் அறையில் போட்டுப் பூட்டிவிட்டுப் புறப்படு'' என்று கூறியதும் காமராஜரின் உதவியாளர் வைரவன் ''இங்கே என்ன இருக்கு அறைக்குள் வைத்துப் பூட்ட?'' என்று கேட்டாராம். ஆனால் இன்றோ, 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்; பதவியிலிருக்கும் போதே சுருட்டிக் கொள்' என்ற ரீதியில் தானே மிகப் பெரும்பாலான தலைவர்கள் நடந்து கொள்கிறார்கள்.

திருமலைப்பிள்ளை ரோடில் தமது சிலை திறந்து வைக்கப்பட்ட போதே பக்கத்தில் கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் சாராயக்கடை ஒன்றும் ஏக தடபுடலுடன் வண்ண விளக்குகள், சினிமாப் பாடல்கள் சகிதம் திறந்து வைக்கப்பட்டதை காமராஜர் அறிய முடியுமானால் இரண்டாவது தடவையாக இதயம் நொறுங்கிச் சாக மாட்டாரா?

''காமராஜர் தேசத்துக்கே பெருமை தேடித் தந்தவர்; அவர் முதலில் ஒரு தேசபக்தர், பிறகுதான் காங்கிரஸ்காரர்'' என்று திருச்சியில் பேசப்பட்டது. ஆனால் இன்று இ. காங்கிரஸில் உள்ள மிகப்பெரும்பாலோர் முதலில் சுயநலம், பிறகு கட்சி, அப்புறம் தேவையானால் தேசபக்தி என்ற ரீதியில்தானே செயல்படுகிறார்கள்?

ஆக இந்த விழாக்கள் எதற்கு? காமராஜரின் எளிமை, உழைப்பாற்றல், நேர்மை, தேசபக்தி, ஆட்சித்திறன் இவற்றை இன்றைய தலைவர்களும் பின்பற்ற வேண்டும் என்ற நோக்கிலா? அப்படித் தோன்றவில்லை. மாறாக,

'தியாகச்சுடர்' என்றும் 'கர்மவீரர்' என்றும் பெரும் தலைவரைப் போற்றிப்புகழ ஒரு நல்வாய்ப்பு; 'ஒரு கடமை – செய்து முடிப்போம்' என்ற எண்ணம்; காமராஜரை மறந்து விட்டால் மக்கள் நம்மைத் தூற்றுவார்கள் என்ற அச்சம்; காமராஜருக்கு விழா எடுத்து அதன் மூலம் அவரது புகழில் நாமும் பங்கு பெறலாம் என்ற ஆசை இவையே மேலோங்கி இருக்கின்றன.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்



# அடுத்த வாரிசு

**அட, அட, அட!**

என்ன பிரம்மாண்டமான செட்கள்! எவ்வளவு அற்புதமான கலை ஜோடனைகள்! ரொம்ப நாளாயிற்று இத்தனை ஆடம்பரங்களைத் திரையில் பார்த்து. ஆடை, ஆபரணங்களிலும் அயர்வில்லாமல் செலவழித்திருக்கிறார்கள். இளவரசி மாதிரி நடிக்க ஸ்ரீதேவி, ரஜினி மாதிரி நடிக்க இன்னொரு ரஜினி என்று ஏகப்பட்ட ஆள் மாறாட்டங்கள் இருந்தாலும், குழப்பமில்லாமல் கதை சொல்லி விருப்பது' டைரக்டரின் திறமை.

**அட, அட!**

பாபுவின் காமிராவுக்கு ஏராளமாய்த் தீனி. அத்தனையும் விழுங்கி, அஜீரணமாகாமல் ஏப்பம் விட்டிருக்கிறது. கூடிய வரை அத்தனை கோணங்களிலும் வர்ணக் கோலங்களைத் திரைக்குக் கொண்டு வந்திருக்கிற அக்கறையைப் பாராட்ட வேண்டும். குறிப்பாய் இரண்டு ரஜினிகள் மோதுகிற இடம்.

அமர்த்தலான செந்தாமரை – ஆளைக் கவரும் சிலுக்கு. (ரஜினியோடு ஒரு டூயட் வேறு!) அழகு உடைகளில் ஸ்ரீதேவி.

**அட!**

ஆறு பாடல்கள். ஆறில் மூன்று (எது எது என்று விரல் விடக் கூடியவர்களுக்காக: 'ஆசை நூறு வகை', 'பேசக் கூடாது; 'காவிரியே') ஜோர். மற்ற மூன்றும் போர்.

அவ்வளவாக அரசியல் பேசாத சோ.

**சே!**

ரஜினியிடம் நாம் என்ன எதிர்பார்ப்போம்? இன்னும் சூடான, வித்தியாசமான சண்டை. ஏதோ பேருக்குக் கடைசிப் பகுதியில் ஒன்றிரண்டோடு சரி.

காவல்காரர்களை ரஜினி அன்று கோ ஏமாற்றுகிற காட்சியாகட்டும், பொக்கிஷ அறைக்கு ராணியைப் பின் தொடர்ந்து திவான் வருகிற காட்சியாகட்டும், விறுவிறுப்பு மாதிரிக்குக் கூட இல்லை. ஊமைப் பட காலத்துக் கற்பனைகள்.

தெருத் தெருவாய் ஸ்ரீதேவி ஆடுகிற நாட்டியத்தில் சிலுக்குக்குச் சின்ன சவால்.

**சே, சே!**

சுத்தமாய் அடித்து உதறி வெயிலில் காயப் போட்ட மாதிரி உயிரே இல்லாத வசனங்கள். பஞ்சு அருணாசலம்! எல்லாம் இது போதும் என்ற அலட்சியமா?

**உஹூம்**

வாசனுக்கும் ஏ. வி. எம்.முக்கும் வாரிசாய் தயாரிப்பாளர் துவாரகீஷ் பணம் செலவழிக்கத் தயாராய் இருக்கலாம். • ஆனால் கதையிலும் புது உத்திகளிலும் அவர்கள் செலுத்திய கவனம் இவருக்கும் இருந்திருந்தால்...

**தியாகராஜன்:** முதல் தடவையாகக் கதாநாயகச் சட்டையை மாட்டியிருக்கிறீர்கள். போல. வெகு சந்தோஷம். ஏற்றுக்கொண்ட பாத்திரத்தைப் பரிமளிக்க வைத்திருக்கிறீர்கள். ஆனாலும் கூட மாடுலேஷனே இல்லாத உங்கள் வசன உச்சரிப்பை ஜீரணிக்கக் கொஞ்சம் கஷ்டமாய்த் தான் இருக்கிறது.

**சரிதா:** மாட்டு வண்டியிலிருந்து கழுத்து நிறைய நகையுடன் கல்யாணப் பெண்ணாகக் கீழிறங்கி, பயத்தில் தத்தளித்து, வார்த்தை சிக்கி திக்கித் திக்கிப் பேசுகிற முதல் கட்டத்திலேயே மனத்தில் நன்றாகப் பதிந்து விடுகிறீர்கள். அப்புறம் மம்பட்டியான் அநியாயமாய்ப் பஞ்சாயத்தில் சவுக்கடி வாங்கும்போது ஊமையாய் வெதும்புகிற இடம், கடைசியாய் மம்பட்டியானைக் கொன்றவனைப் பரிசில் துடுப்பாலேயே பரமண்டலம் அனுப்பும் இடம் — படம் முழுக்க கோபமும், துக்கமும், சிரிப்பும், வெட்கமுமாய் ஆக்கிரமித்துக் கொள்ளுகிறீர்கள்.

**செந்தாமரை:** ஒரு சீன், இரண்டு சீன் என்று வந்தாலும் கூட அந்த அமர்த்தலான அழகு அழகுதான்.

**ஜெயமாலினி:** ஏதேது. நடனத்தோடு நிறுத்திக் கொள்ளாமல் அப்படிக் கொஞ்சம் சிணுங்கி, இப்படிக் கொஞ்சம் அழுது நடித்தும் காட்டி விட்டீர்களே!

**ரங்கா:** உங்கள் காமிராவுக்குத் திருஷ்டி சுற்றிப் போட வேண்டும். பொழிகிற நீர் வீழ்ச்சியாகட்டும், இருளான தோப்புகளாகட்டும், எங்கே பிடித்தீர்கள் இத்தனை அருமையான காட்சிகளை! சுறுசுறுப்பான உங்கள் காமிராக் கண் படத்திற்குச் சிறப்புக் கவர்ச்சி.

**இளையராஜா:** 'காட்டு வழி போற பொண்ணே...' — தலைப்புப் பாடலில் காமிரா தன் பாட்டுக்கு அதன் வித்தைகளைச் செய்து கொண்டிருக்க, நீங்கள் பாட்டுக்கு உங்கள் குரலில் வித்தை காட்டி விட்டீர்கள். 'சின்னப் பொண்ணு சேலை'யும் சிங்காரமான சரசம் தான். நாட்டுப்புறப் பாடல்களின் நாடி உங்கள் கையில். அப்புறம் கேட்பானேன்!

**ஜூடோ ரத்தினம்:** உங்களைத் தனியாய்க் குறிப்பிட்டுச் சொல்லத்தான் வேண்டும். மாறுதலான சண்டைக் காட்சிகளை மனம் கவர்கிற மாதிரி அமைத்திருக்கிறீர்கள்.

**ராஜசேகர்:** தலைகீழாய்த் தொங்கும் மம்பட்டியான் ஊஞ்சலாடி மெழுகுவர்த்தியைக் கவ்வும் இடம்; போலீஸில் சிக்கிய அவன் தோழன் உண்மையைச் சொல்கிறேன் தண்ணீர் கொடுங்கள் என்று கேட்டு சோடா வாங்கி, படாரென்று பாட்டிலைத் தரையில் அடித்து வயிற்றில் செருகிக் கொள்ளும் இடம் என்று நிறைய அருமையான இடங்கள்.

மம்பட்டியான் படு அவசரமாய்த் தப்பித்துப் போகிறபோது குறுக்கே குழந்தை வந்துவிட, வண்டியை அதி பிரயத்தனத்துடன் நிறுத்தி அவன் போலீஸில் சிக்கிக் கொள்ளும்பொழுது குழந்தையும் தாயும் மம்பட்டியானைப் பார்த்துக் கும்பிடுகிற இடம் ஒரு அற்புதமான கட்டம்.

முதல் படத்திலேயே முதல் தர டைரக்டர்களின் வரிசையில் இடம் பிடித்துக் கொண்டதற்குத் தனியே பாராட்டுக்கள்!

—ஜெயமன்மதன்



# நீங்கள் கேட்டவை

○ ஏ. எம். பழனிச்சாமி, கோவை

? ஓர் எழுத்தாளனின் எழுத்தாற்றல் எழுத்தாளர்களைக் கவர வேண்டியது அவசியமா? வாசகர்களைக் கவர வேண்டியது அவசியமா?

! இரண்டும் அவசியம் தான். ஆனால் இவை மட்டும் போதாது. முதலில் பத்திரிகை ஆசிரியரை, பிறகு வாசகரை, அப்புறம் பதிப்பகத்தாரை, அடுத்து விமர்சக எழுத்தாளரை. இத்தனை பேர்களையும் கவர்ந்த பிறகு பரிசுகள் தந்து கௌரவிக்கும் குழுவினர் கவனத்தையும் கவர வேண்டும். இப்படி படிப்படியாக அனைவர் கவனத்தையும் கவர்ந்து உள்ள ஒருவர், பாளையங்கோட்டை எழுத்தாளர் திரு. ர. சு. நல்லபெருமாள். க ல் கி வெள்ளி விழா போட்டியில் இவரது கல்லுக்குள் ஈரம் நாவல் இரண்டாம் பரிசு பெற்றதைத் தொடர்ந்து பல வெற்றிகள். சமீபத்திய வெற்றி திருமதி ரெங்கம்மாள் இலக்கியப் பரிசு ரூ. 10,000. கோவை கஸ்தூரி சீனிவாசன் அறக்கட்டளை வழங்கும் இப்பரிசைத் தட்டிச் சென்றது அவரது "நம்பிக்கைகள்" என்ற நாவல்.

○ பி. கே. மூர்த்தி, கல்கத்தா

? சமீபத்தில் திரைப்படச் செய்தித் தொகுப்பில் சஞ்சய் காந்திக்கு அஞ்சலி ஐந்து நிமிடம் காட்டப்பட்டது. அவருடன் உயிரிழந்த மற்றொரு இளம் விமானியை அம்போ என்று மறந்துவிட்டார்களே இது நியாயமா?



○ சஞ்சய்

! அந்த விமானி என்ன பிரதமரின் மகனா? அல்லது எமர்ஜென்ஸி கால அட்டூழியங்களுக்குக் காரணமாயிருந்தவரா? ஏதுமில்லையே? அவரைப் பற்றிக் கூறாவிட்டால் குடிமுழுகி விடாது. ஆனால் சஞ்சய் செய்த அநீதிகளை மறைக்கவும் அவரை ஹீரோவாக்கவும் அரசியல் ரீதியான அவசியமிருக்கிறது.

○ எஸ். மோகன் மே. மாம்பலம்

? மூன்றாம்பிறை ஸ்ரீதேவிக்கும் சத்மா ஸ்ரீதேவிக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! தமிழ் சீனுவை இந்தி சோம்பிரகாஷ் தூக்கிச் சாப்பிட்டு விட்டார் என்று கூறலாம். ஆனால் விஜிக்கு ரேஷ்மி ஒன்றும் குறைந்து போய்விடவில்லை என்று மட்டுமே சொல்ல முடியும். நிற்க, வசனங்களை வரிக்கு வரி இந்திப் படுத்தியவர்கள் ஒரு நல்ல டயலாக்கை விட்டு விட்டார்களே:

"சீனு! ஏன் இந்த மரமெல்லாம் இவ்வளோ உயரமாயிருக்கு?"



○ ர.சு. நல்லபெருமாள்

"ம்... வானத்திலே அழுக்குப் படிஞ்சா ஒட்டடை அடிக்க!"

○ பாரதிரங்கன், கும்பகோணம்

? சமுதாயப் பிரச்னையான வரதட்சிணைக் கொடுமையை மையக் கருத்தாகக் கொண்ட டௌரி கல்யாணம் வரி விலக்குப் பெறுமா?

! எல்லாப் படத்திலுமே நேர்முகமாகவோ மறைமுகமாகவோ ஒரு சமுதாயப் பிரச்சினை இருக்கும். இதற்காக வரி விலக்கு தருவது என்று ஆரம்பித்தால் கஜானா காலி. படம் கமர்ஷியல்—பாக்ஸ் ஆபீஸ் கண்ணோட்டமின்றி எடுக்கப்பட்டுள்ளதா என்றும் கவனிக்க வேண்டும். அப்படி பார்க்கும்போது டௌரி வரி விலக்குப் பெறாது.

○ ஆராமுதன், திருப்பதி

? என். டி. ஆர். - ஏ. ஐ. ஆர் தகராறு பற்றி...?

! என். ஜி. ஓக்களின் வேலை நிறுத்தம் பற்றி ரேடியோவில் பேச என். டி. ஆர். நேரம் ஒதுக்க வேண்டும் என்றால் என். ஜி. ஓக்கள் தங்களுக்கு நேரம்



○ குமரி அனந்தன்

ஒதுக்குமாறு வானொலி நிலையத்தைக் கேட்டதில் நியாயம் இருக்கிறது. எனவே, முதல்வர்கள் வானொலியில் பேச முடிவெடுக்கும்போது அதற்கு ஒரு தேசிய முக்கியத்துவம் இருக்க வேண்டும். (சுதந்திரதினம், பெருவெள்ளத்தால் பாதிப்பு போன்றவை.) அரசியல் காரியங்கள் ஒவ்வொன்றுக்கும் வானொலி விளக்கம் என்று ஆரம்பித்தால், வானொலி பட்டிமன்றமாகி விடும். பிரச்னைக்குத் தீர்வு வானொலியைச் சுதந்திர நிறுவனமாக்குவது தான்.

○ கமலபதி, திருவாடானை

? ஆந்திர என். ஜி. ஓ. வேலை நிறுத்தம் தீவிரமடைந்து விட்டதே?

மக்களின் பேராதரவு தனக்கு இருக்கிறது என்பதால் ஒரு முதல்வர் தம் இஷ்டத்துக்கு எல்லோரும் வளைந்து கொடுப்பார்கள் என்று எதிர்பார்க்கக் கூடாது. சில சமயங்களில் விட்டுக் கொடுப்பதே விவேகமாகவும் கௌரவம் சேர்ப்பதாகவும்பலத்தை அதிகரிப்பதாகவும் விளங்கும். சிறிய சலுகைகள் அளித்துப் பெரிய லாபங்களைப் பெற ஒருமுதல்வருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

○ வி. ராம்கோபால், சென்னை33

? எத்தனையோ நல்ல திரைப் படங்கள் இருக்க டீ. வி. நிலையத்தினர் நிரந்தரம் போன்ற அறுவைகளைத் தேர்ந்தெடுப்பதேன்?



○ விசு

! அடாடா இது தெரியவில்லையா? 'டீ. வி. நிகழ்ச்சிகள் அறுவையாயுள்ளன. சினிமாவுக்காகத்தான் டீ. வி. வைத்திருக்கிறோம்' என்ற அவப்பெயர் நீங்கிவிடுமல்லவா, அதற்குத் தான்!

○ ஆர். அரிகோபி, குடியாத்தம்

? குமரி அனந்தன் தாக்கப் பட்டது குறித்து...

! தாக்கியவர்கள் கண்டனத்துக்குரியவர்கள். ''ஏமாற்றமடைந்த தொகுதி மக்கள் தங்கள் எம். எல். ஏவைத் தாக்குவது இயற்கை'' என்று அறிக்கை விட்டுமக்களை சுலபமாக ஏமாற்றி விடலாம் என்றுஎண்ணியவர்கள், பாவம், அனுதாபத்துக்குரியவர்கள்.

○ சிங்கை முத்து நாயகம், ★ விக்கிரமசிங்கபுரம்

? அஸ்ஸாம் - பங்களா தேஷ் எல்லையில் அகதிகள் அஸ்ஸாமுக்குள் புக முடியாதபடி 247 கி. மீ. தூரத்துக்கு சுவர் எழுப்பப் போகிறார்களாமே?

! அகதிகள், பிரச்சினையாகி வருவது மெய்தான். ஆனால் பிரச்சினையைச்சமாளிக்க வேறு வழி தேட வேண்டும். பங்களா தேஷிலிருந்து அகதிகளாக மக்கள் ஏன் வெளியேறுகிறார்கள்? அந்த ராணுவ ஆட்சியின் கொடுமை தாங்காததாலோ அல்லது சுபிட்சம் நிலவாததாலோ தான். ஆகஒரு கொடுமையிலிருந்து விடுபட எண்ணும் மக்களுக்கு இந்தத் தடுப்புச் சுவர் மற்றொரு மாபெரும் கொடுமையாகவே தோன்றும். மனிதாபிமானமற்றசெயல் இது.



○ ஸ்ரீதேவி

○ பா. சரவணன், பல்லாவரம்

? அ. தி. மு. க.வின் கொள்கைகள் இ. காங்கிரஸுக்கு விற்கப்படும் என்று கருதப் படுகிறதே உண்மையா?

! இருகட்சிகளிடமுமே பிரமாதமான அரசியல் கொள்கை என்று ஏதுமில்லாத போது ஒருவருக்கொருவர் கொள்கைகளை விற்றுக் கொள்வதால் இப்போது நாட்டுக்கு ஏற்பட்டுள்ளதை விடவும் புதிய பெரிய நஷ்டம் ஏதும் வந்து விடப் போவதில்லை!

○ சாவித்திரி, செங்கல்பட்டு

? நாளிதழைப் பிரித்தால் ஒரே பிரச்சினைகள் மயமாயிருக்கிறதே?

! என்ன செய்ய, பிரச்சினைகள்தாம் சுவையான செய்திகள்ஆகின்றன. என்றாலும் பிரச்சினைகள் தீரும் என்ற நம்பிக்கையூட்டும் செய்திகளும் அவ்வப்போது வரத்தானே செய்கின்றன. (உ—ம்.)கோவை அரசினர் கலைக் கல்லூரி மாணவர்கள் ராகிங்கைத் தவிர்த்துப் புதிய மாணவர்களைச் சந்தனம் குங்குமம் அளித்து வரவேற்ற அதிசயம்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

முத்துநாயகம்,
35,ராமலிங்கபுரம்
விக்கிரமசிங்கபுரம்
நெல்லை மா. வ. 627.425

# டௌரி கல்யாணம் வரிவிலக்கு பெறுமா?

# குடிநீர் பற்றாக்குறையை நீக்க
# **டான்சி** யின்
# அயராத ஆக்கப்பணி!



பொது மக்களுக்கு தேவை என்று வரும்பொழுது அத்தேவைகளுக்கெனவே முனைந்து சேவை செய்வதில் முன்னணி வகிப்பதே டான்சி.

குடிநீர் பற்றாக் குறையால் மக்கள் வாடும் இந்நேரத்தில், மக்கள் நலனில் அக்கறை கொண்டு, தரமான ஆழ்துளைக் கை பம்புகள் மற்றும் உருக்கு நீர்த் தொட்டிகள் போன்றவற்றை விரைந்து தயாரித்தளிக்கிறது டான்சி.

ஆம்! இன்று எங்கு நோக்கினும் டான்சியின் உயரிய படைப்புகள், அதுவும் உரிய நேரத்தில்...

---

*மக்களின் தாகத்தை தணிக்கிறது டான்சி !*

---

## டான்சி
## தமிழ்நாடு சிறு தொழில் நிறுவனம்

(ஒரு தமிழ்நாடு அரசு நிறுவனம்)

1, ஓயிட்ஸ் சாலை, சென்னை-600 014 தொலைபேசி: 82161 தந்தி: TANSI டெலக்ஸ்: 41-7496 TNSI

DIPR 505 '83' (R)

**''என்னோட முதல் பேஷண்ட் நீ
உன்னோட முதல் பேஷண்ட் நான்!''**

## 16

பத்மா பாண்ட், ஜீன்ஸ் அணிந்ததில்லையே தவிர, நாகரிக உடையணியும் சக மாணவிகளைப் பார்த்து அவள் பொறுமைப்பட்டதில்லை, எரிச்சலடைந்ததில்லை.

டெய்ஸி 'ராப் ஸ்கர்ட்டை' இடுப்பில் சுற்றிக்கொள்ளும் நேரங்களில், 'உலகிலேயே பெண் உடம்புக்கு ஏற்றதும், பொலிவு தருவதும் புடவை – பிளவுஸ்தான். பணமும் வசதிகளும் சேர்ந்தால்கூட, பாண்ட், பனியன், டி ஷர்ட் போன்ற உடைகளை நாட மாட்டேன்' என்று பத்மா தன் மனதினுள் பேசிக் கொள்வதுண்டு.

டெய்ஸியிடம் புடவைகளை விட பாண்ட், மிடி, சல்வார் கமீஸ் போன்றவைகளே அதிகம். சென்ற 'ஃப்ரஷர்ஸ் வெட் ரிஸப்ஷன்' தினத்தன்றுகூட டெய்ஸி, 'கம்பெனிக்காக இதைப்போட்டுக்கிட்டு வரக் கூடாதா'என்று தன்னுடைய 'டூ பீஸ்' மாக்ஸி'யைக் கொடுத்துக் கெஞ்சினாள். பத்மா மறுத்து விட்டாள். இப்போது ராம் அன்பாக உத்தர விடுகிறான். என்ன செய்வது?

தயக்கப் புன்னகையுடன், ''சும்மா இப்படியே வர்றேனே'' என்றாள். ''இந்தப் புடவை நல்லா இல்லையா? சித்தி எடுத்துக் குடுத்தது. இன்னிக்குத்தான்கட்டிக்கறேன்.''

''ஐயையோ! நல்லா இல்லேன்னு யார் சொன்னது. இதே மாதிரி புடவை ப்ளவுஸ்ல தான் எப்பவும் உன்னைப் பார்க்கணும்னு நான் ஆசைப்படறேன் பத்மா. பைக்ல 'ஸாரி கார்ட்' இல்லே. பாண்ட்டுன்னு சௌகர்ய வசதியா இருக்குமேன்னு சொன்னேன். உன் இஷ்டப்படியே வா.''

வாசலில் தோன்றிய வேலு, ''வசந்த் ஐயா வந்திருக்காரு'' என்றான்.

''எக்ஸ்க்யூஸ் மீ பத்மா'' என்று ராம் அறையை விட்டு வெளியேறினான். பத்மா கதவை உட்புறம் தாளிட்டுக்கொண்டாள்.

சில நிமிடங்களுக்குப் பின் ராம் அவனை விடச் சிறிது வளர்த்தியான ஒரு இளைஞன் பின்தொடர மாடிக்கு வந்தான். பத்மாவைப் பார்த்து ஸ்தம்பித்தான்.

அவள் 'பாண்ட்'டும் ஸ்லீவ்லெஸும் அணிந்து ஒற்றைப் பின்னலைப் பிரித்து முதுகுப் பக்கம் கரிய நீர் வீழ்ச்சியைக் காண்பித்தாள். புத்தக அலமாரியிலிருந்து என்ஸைக்லோபீடியா எடுத்துப் புரட்டினாள்.

''டாக்டர் மிஸ் பத்மா, என்னோட காலேஜ்மேட்'' என்று பத்மாவைப் பின்னால் வந்தவனுக்கு அறிமுகம் செய்து வைத்தான் ராம். ''வசந்த், அப்பாவோட அண்ணா பிள்ளை. சுந்தரம் க்ளோடன்ல எஞ்சினீயர். ஒசூர் மொபெட் ப்ளாண்ட்ல ஒர்க் பண்றான்.''

''ஹலோ''

# நேசமுள்ள வான்சுடரே



சவிதா

''ஹலோ''

தோற்றத்தில் வசந்த் முதல் பதிப்புப் போலவும் நாம் திருத்திய மறு பதிப்புப் போலவும் காணப்பட்டனர். அதிக வித்தியாசம் இல்லை.

''உட்காருடா போகலாம்.''

''வரேன். டைம் ஆயிடுச்சு. ஸண்டே அங்கிளும் ஆன்டியும் வந்தப்பறம் வரேன்''.

''எங்க கூட எல்லாம் பேச மாட்டியா?''

''மாட்டேன்'' என்ற வசந்த் வாசல்வரை போய்த் திரும்பினான். ''மறந்தாப்ல தும்மிட்டேன்னு 'போய் ப்ளட்டும் யூரினும் டெஸ்ட் பண்ணிட்டு வர்ற வழில செஸ்ட் எக்ஸ்ரே எடுத்துட்டு வா'ம்பீங்க. எதுக்கு வம்பு. வர்றேன்.''

வசந்த் வெளியேறிவிட்டான். பத்மா சிரித்தாள். ராம் அவளை ரசிக்கிற பாவனையில் தலையைச் சற்றே சரித்து அவளையே பார்த்தான்.

அந்தப் புதிய உடை அவள் மேனியை அதிகம் இறுக்காமல், அவளுக்காகவே தைக்கப்பட்டது போல் மிகவும் கச்சிதமாகப் பொருந்தியிருந்தது.

''யு ஆர் ட்ரூலி வொண்டர்ஃபுல் பத்மா.'' என்றான். ''எவ்ரிதிங் அபௌட் யு இஸ் வொண்டர்ஃபுல்''

''எங்கே வாங்கினீங்க இதை யெல்லாம்?''

''கோடைக்கானல்ல.''

''எப்படி என்னோட மெஷர்மெண்ட்ஸ் உங்களுக்குத் தெரிஞ்சுது?'' விழிகளை உயர்த்திக் கேட்டாள்.

''அதான் எனக்கும் தெரியலே'' என்றான் புன்னகையுடன்.

பைக்வரை வந்த பிறகு பத்மா ''ஹெல்மெட்?''என்று நினைவூட்டினாள்.

''வேணா ஹெல்மெட் எடுத்துட்டு வா.''

அடையாறு கடற் கரையை நோக்கிப் பைக் பறந்தது. ராம் வேகத்தை மேலும் அதிகப்படுத்தினான். பத்மா பயத்துடன் ''மெதுவாப் போங்க'' என்றாள். அவள் கரம் அவளையறியாமல் கொடி போல் அவனைச் சுற்றிப் படர்ந்து கொண்டது.

மனித நடமாட்டமில்லாத கடற்கரையில் அமர்ந்தனர். பேசினர். சிரித்தனர். மணலில் விரலால் கிறுக்கிவிட்டு மௌனமாக ஒருவரை யொருவர் பார்த்தனர்.

மேற்கில் சூரியனின் வீழ்ச்சி உறுதியான போது எழுந்து மறுபடியும் பைக்கை நோக்கி நடந்தனர்.

பத்மாவுக்கு 'ஓ' வென்று வாய் விட்டு அழ வேண்டும் போல் இருந்தது. விடியற்காலை பல் தேய்த்தபோது விழாக் கோலம் பூண்டிருந்த அவளுடைய மனம் அந்தப் பகலின் எல்லையில் அவனைப் பிரியப் போகிறோமே என்ற வேதனையால் மிகவும் தொய்வடைந்து விட்டது.

'ஹவுஸ் சர்ஜன்ஸ் குவார்ட்டர்ஸ்' மாணவிகள் விடுதியை விட்டு விலகி, சின்ன ஒரு மாடிக் கட்டிடத்தில் இருந்தது. டெய்சி முன் கூட்டியே தேவையான ஏற்பாடுகளைச் செய்திருந்ததால்மறுபடியும்பத்மாவுக்கும் டெய்சிக்கும் ஒரே அறை. மாடியில் கிழக்குக் கோடியில் கிடைத்தது. பரந்த ஜன்னல்களுடன் காற்றோட்டமான அறை. தொலைவில் மின் ரயில்கள் பூச்சிகள் போல இங்குமங்கும் ஓடின.

ஓ.பி., வார்டு, நைட் ட்யூட்டி என்று இயந்திர கதியில் புதிய வாழ்க்கை தொடங்கியது. கல்லூரிக்கு மெதுவாகக் கிளம்பிய புதிய முதலாண்டு மாணவிகளை ஜன்னல் வழியாகப் பார்த்தபோது பத்மாவுக்குள் சோகம் கலந்த சின்னப் பொறாமை தளிர் விடும். இனி இந்த வாழ்க்கை கிடைக்காது. ஒரு நாள் பத்மா ஆட்டோ எடுத்துக் கொண்டு ஆயிரம் விளக்கிற்குச் சென்றாள். முதல் மாத ஸ்டைப்பெண்ட் பணம் மூந்நூறு ரூபாயைச் சித்தி - சித்தப்பாவிடம் கொடுத்து அவர்களுடைய பாதங்களைத் தொட்டு விழிகளில் ஒற்றிக் கொண்டாள். சித்தி விசாலமான புன்னகையுடன் ''மகராசியா இரும்மா'' என்றாள்.

## சோபாவின் பயணம்

கடந்த நான்காண்டுகளாக ஒரு சோபா ஏறத்தாழ 24000 கிலோ மீட்டர் பயணம் செய்து இருக்கிறது. எதற்காக இந்தப் பயணம்?

அமெரிக்காவில் இரு புகைப்படக்காரர்கள் பல புகைப்படங்களைஎடுத்து, தொகுத்து, புத்தகமாக வெளியிட விரும்பினார்கள். அந்தப் புத்தகம் புதுமையான முறையில், அமைய வேண்டும் என்பதற்காக, தாங்கள் எடுத்த அனைத்து புகைப்படங்களிலும் ஒரே சோபாவை இடம் பெறச்செய்தார்கள். இதற்காக அந்த சோபாவை எங்கு சென்றாலும் தங்கள் 'வேனில்' எடுத்துச் சென்றார்கள்.

காட்டின் மத்தியிலும், மலையின் உச்சியிலும், விண்வெளி ஓடமாகிய கொலம்பியாவுக்கு எதிரேயும் அதே சிவப்பு சோபாவை வைத்துப் படம் எடுத்தார்கள். புகைப்படக்கலை இப்படியெல்லாம் புது வடிவமெடுக்கிறது அங்கே!

—பெம்ஜி—
நன்றி: ஸ்பான்.



''அடுத்த மாசத்திலேர்ந்து இந்த ஸ்டைப்பெண்ட் பணத்தை மெஸ்ஸுக்குக் கட்டிரலாம்னு பாக்கறேன்'' என்றாள் பத்மா. சித்தியின் முகம் ஒடுங்கியது.

''ஏம்மா?'' என்றார் சித்தப்பா.

''இந்த வருஷத்திலேர்ந்து ரூம் ரெண்ட் கிடையாது சித்தப்பா. மெஸ் பில் மட்டும் தான் கட்டணும். அதுக்கு ஸ்டைப்பெண்ட் பணம் போதும். அனாவசியமா பாலம் பத்திரிகையிலேர்ந்து பணம் வாங்க வேண்டாம்னு பாக்கறேன்.''

சித்தி — சித்தப்பா விழித்தனர்.

பத்மா 'பெஸ்ட் அவுட் கோயிங்ஸ்டூடண்ட்' என்ற கௌரவத்தைப் பெற்ற அன்று தாஸப்பிரகாஷில் ராம் தன் நண்பர்களுக்கு விருந்து கொடுத்தான். டாக்டர் குருசாமி முதலியார் பரிசை ராம் பெற்றதற்காகப் பத்மா ஏராளமான பொருட் செலவில் டெய்சிக்கு ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுத்துக் கொண்டாடினாள்.

பள்ளியில் 'இம்பொஸிஷன்' எழுதாமல் தப்பிய பத்மா கையொடிய மருந்துச் சீட்டுக்களில் கையிருப்பில் உள்ள மாத்திரைப் பெயர்களை மாறி மாறி எழுதித் தள்ளினாள்.

மகிழ்ச்சியால் ஒரு சுற்றுப் பருத்திருந்தவள் இரத்த வங்கிக்குக் கால் தேய நடந்து 'ஸ்லிம்' ஆனாள். டெய்சி சிரிஞ்சுக்குப் பொருத்தமான ஊசியைத் தேடுவதில் கால் மணி நேரத்தைச் செலவிட்டுத் துவாரம் அடைபட்டுப் போன ஊசியைக் கண்டு பிடித்தாள். ராம்குமார், 'ஸிஸ்டர் அந்த பேஷண்டுக்கு வயிறு வலிக்குதாம். சீக்கிரமா பெட்பான் குடுங்க' என்பான். அந்த ஸிஸ்டர் நிதானமாக, 'இருங்க டாக்டர். இங்கே ஒரு வயல் காரமைஸின் இடிக்குது. எண்ணிக்கிட்டிருக்கேன்' என்று சொல்ல, 'பெட்பா'னை அவனே தூக்கிக் கொண்டு ஓடுவான். கப்பையா எஸ். கே. எஸ். யூனிட்டில் 'கால் டியூட்டி' பார்த்தபோது, நோயாளிகளைச் சரியாக இரவு எட்டரைக்கு 'ஸெடேட்' பண்ணி, தாலாட்டுப் பாடிவிட்டு .'கால் டியூட்டி ஹவுஸ் சர்ஜன்ஸ்' அறையில் போர்வைக்குக் கீழே தஞ்சம் புகுவான். நள்ளிரவு ஒரு மணிக்கு ஆயா வந்து, 'எஸ். கே. எஸ். யூனிட் ஹவுஸ் ஸர்ஜனுக்கு கால் சார், யார் சார், எழுந்திருங்க' என்று எழுப்பும்போது கப்பையா போர்வையை விலக்கி, 'அவர் இல்லேம்மா' என்று சொல்லி விட்டுப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொள்ளுவான்.

வார்டு முற்பகலில் பளபளப்பாகி சீஃப் ரவுண்ட்ஸ் வரும்போது, சுமர்கட்காரன் பின்னே செல்லும் பள்ளிக் குழந்தைகள் போல எல்லாரும் பின் தொடர்ந்தனர். ஸர்ஜரியில் வேலை இல்லாதபோது, ராம் மெடிகல் வார்டுக்கு வந்து ஊசி போடுவதில் பத்மாவுக்கு உதவினான். நோயாளிகள் கண்ணயர்ந்த பின்னிரவில், காலியான ட்ரிப் ஸ்டாண்டை ஸிஸ்டர் எடுத்து வைப்பதில் ஈடுபட்டிருந்த சமயங்களில் பத்மாவும் ராமும் ஒரே மேஜையில் உறங்காத கண்களுடன் பார்வைகளைப் பரஸ்பரம் பரிமாறிக்கொண்டிருந்தனர்.

முதல் ஆறு மாதங்கள் படுவேகமாக ஓடியது. எஸ். பி. எம்'மிலும் 'கைனக்'கிலும் இன்னொரு ஆறு மாதங்கள் கழிந்த பிறகு ஒரு நாள் வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்த நேரத்தில் பத்மாவும் ராமும் தமிழ் நாடு மருத்துவ கவுன்சிலில் டாக்டர்களாகத் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து சான்றிதழ் பெற்றனர். ரெஸ்டாரெண்ட் அறைக்குள் ஒருவருக்கொருவர் வாழ்த்துத் தெரிவித்துக் கொண்டனர். ராம் ப்ரீஃப் கேஸில் கொண்டு வந்திருந்த புதிய ப்ளட் பிரஷர் அபாரடஸை எடுத்துப் பத்மாவிடம் கொடுத்துத் தன் கரத்தில் சுற்றச் சொன்னான். புதிய பிரிஸ்கிரிப்ஷன் பாட் ஒன்றைக் கொடுத்தான். பத்மா பி. பி. பார்த்து எழுதிக் கொடுத்தாள். ''நான் உன்னோட முதல் பேஷண்ட்'' என்றான், ராம்.

அப்புறம் பத்மாவுக்கு அவன் பி. பி. பார்த்தான். அவனுடைய கரத்தின் ஸ்பரிசம் ... அவள் இதயத்தை வேகமாகத் துடிக்கச் செய்தது. அடுத்த மாதத்தில் அவன் தன்னைப் பட்டில் வைத்துக் கொடைக்கானல் ஏரியில் ஊர்வலம் அழைத்துச் செல்வான் என்பதையும், உயிரோடு போராடும் நோயாளியாக மதுரை மருத்துவ மனையின் 'இன்டென்ஸிவ் கேர்' படுக்கையில் கண் மூடிக் கிடக்கப் போகிறான் என்பதையும் பத்மா அப்போது அறிந்தாளில்லை.

(தொடரும்

''வாட் இஸ் யுவர் நேம்''னு கேட்டதுக்கு ''மீ நேம் இஸ் நளினுஸ்ரீ''னு சொன்னுளாம் பிரபல நடிகை.''

''சரியான நாட்டுப்புறமாச்சே! ஐ நேம் இஸ் நளினுஸ்ரீனு அல்லவா என்னை மாதிரி சரியாச் சொல்லணும்.''

—பி. ஆர். கே.

நகர்ப்புறம் நகைக்கிறது



"சாணை தீட்டலையோ! சாணை தீட்டலையோ!'' — கூக்குரலிட்டுக் கொண்டே சாணை தீட்டும் கருவியைத் தோளில் சுமந்து கொண்டு மருதாசலம் நடந்தான். அவனுடைய கண்களிலே ஒரு பரபரப்பு. ஏதோ ஒரு விபரீதம் அவனால் நடக்கப் போகிறது என்பதை வெளிப்படுத்துவது போல ஒரு மிரட்சி அவனது முகத்தில் தென்பட்டது.

அவனுடைய நெஞ்சத்திலே, வங்காளக் கடலில் மையம் கொண்டிருக்குமே சூறாவளியும் புயலும் அப்படி ஒரு பழிஉணர்வு விசுவரூபம் எடுத்து ருத்ர தாண்டவம் ஆடியபடி இருந்தது.

காலைப் பொழுது சரியாக மணி பத்து என்பதை மணிக்கூண்டு கடிகாரம் காட்டி மணியடித்து ஓய்ந்தது.

''உம்! சரியாக நேரத்துக்கு வந்தாச்சு. இன்னும் கொஞ்சம் நேரத்துல அவன் இந்த வழியாத்தானே ஸ்கூட்டரிலே வந்தாகணும்.''

—மருதாசலத்தின் மன அதிர்வுகள் பேசிப் பேசி ஒத்திகை பார்த்த வண்ணமிருந்தன.

ஜனநடமாட்டம் அவ்வளவாக இல்லாத ஒரு குறுகலான வளைவுச்சாலை அது என்பதை ஏற்கெனவே பத்துநாட்களாகத் திட்டமிட்டுத் துப்பறிந்து தான் மருதாசலம் அங்கே சாணை தீட்டும் கருவியோடு நின்றிருக்கிறான்.

''அதோ... ஸ்கூட்டர் ஓசை: அவனாகத் தான் இருக்கும். சாணை தீட்டும் கருவியில்



# சாணை தீட்டலையோ!

## எஸ். அறிவுமணி

கத்தியைத் தயாராக எடுத்து வைத்துக் கொண்டான் மருதாசலம்.

''சே! வேற எவனோ இல்லே வர்றான்''

—சலிப்பு அவனிடம் விளையாட்டுக் காட்டியது.

யார், யாரோ அந்தச் சாலைவழியே சர்ரென்று ஸ்கூட்டரிலும், காரிலும் சறுக்கிக் கொண்டு போனார்களேயொழிய மருதாசலம் காத்துக் கொண்டிருந்தது யாருக்காகவோ, அவன் வரவில்லை.

—மருதாசலம் பற்களைக் கரகரவென்று இறுக்கினான். அந்தச் சாலையில் ஓர் ஓரத்தில்

நின்று சாணை தீட்டுபவனைப் போலப் பாசாங்கு செய்தான் அவன்.

மூன்று நாட்களாக மருதாசலம் இதேசாலையில் இந்தச் சாணை தீட்டும் கருவியோடு தயாராக நின்றிருந்தும், அவன் எதிர்பார்க்கிறவன் இந்த வழியே வரவே இல்லையென்ற ஏமாற்றமும் அதே நேரத்தில் எதிர்பார்ப்பும் அவனை வாட்டின:

பதினைந்து தினங்களுக்கு முன்பு மருதாசலம் சென்ற இண்டர்வியூ நிகழ்ச்சிகளை இப்போது நினைத்துப் பார்த்தான். கோபம் அதிகமாகியது. அவனால் அந்த நிகழ்ச்சியை மறக்கவே முடியவில்லை.

கிளார்க் வேலை ஒன்றிற்காகத் தனிப்பட்ட கம்பெனியில் இண்டர்வியூவிற்குச் சென்றிருந்தான் மருதாசலம்.

இரண்டே போஸ்ட்டிற்கு இருபத்திஐந்து பேர் வந்திருந்தார்கள். அதில் மருதாசலம் இருபத்தி இரண்டாவது ஆளாக டோக்கன் கொடுக்கப்பட்டிருந்தான்.

அதிலும் பத்துப் பதினைந்து பெண்கள். அவனுக்கு அதில் நம்பிக்கையே இல்லை: காலையில் ஒன்பது மணிக்குத் தேர்வு ஆரம்பம் என்று கார்டில் அச்சடித்து விட்டு ஆரம்பம் ஆனதே பதினொன்றரை மணிக்குத்தான்.

அதுவும் இரண்டு பேர்களை விசாரித்து விட்டு இடைவேளை விட்டுவிட்டார்கள். டிப்டாப் பேர்வழிகளெல்லாம் ஐஸ்கிரீம் பார் நோக்கிப் போய் விட்டார்கள்.

மருதாசலமும் இன்னும் சிலர் மட்டுமே பக்கத்திலேயே இருந்த நாயர் டீக்கடையில் டீயும் பன்னும் சாப்பிட்டு அமர்க்களமாக மதிய உணவை முடித்துக் கொண்டதாக மீண்டும் இண்டர்வியூ ஆபீஸிற்கு வந்தார்கள்.

அழகிப் போட்டிக்கு வந்திருப்பதைப்போல் வந்திருந்த பெண்கள் லிப்ஸ்டிக் பூசிக் கொண்டார்கள்.

''மருதாசலம்... மருதாசலம்... மருதாசலம்'' ஏலக்கடை மாதிரி பியூன் கூப்பிட்டுக் குரல் கொடுத்தான்.

அவசரமாக அறைக்குள் நுழைந்தான் மருதாசலம்.

மூன்று டை கட்டிய அதிகாரிகள் வட்டமாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அதில் ஒருவர் மட்டுமே மருதாசலத்தை அளவுக்கு அதிகமாகக் கேள்வி கேட்டார். எல்லாவற்றிற்கும் கூடியவரையிலும் பொறுமையோடும் சரியாகவும் பதில் சொல்லி முடித்தான் மருதாசலம்.

அவனுடைய சர்டிபிகேட்டுகளையெல்லாம் கூர்ந்து நோக்கிய அவர்களுக்கு அவனுடைய படிப்பில் திறமையிருப்பதாக உணர்ந்தாலும் பாராட்ட விரும்பவில்லை.

உடனேயே சொல்லி விட்டார்கள். ''சாரி, மிஸ்டர் மருதாசலம்... உங்களுக்கு இந்த வேலையைத் தர முடியாது.''

—அதிர்ந்து போனான்... ''ஏன் சார்?'' திருப்பிக்கேட்டான்.

''ஏன், தரமுடியாதுங்கிறதையெல்லாம் எங்களால் சொல்ல முடியாது, நீங்க போகலாம், நெக்ஸ்ட் கம் இன்.''

—ஒரு கண்ணாடி போட்ட அதிகாரி எரிந்து விழுந்தார். ''சார், தயவு செஞ்சு கேக்குறேன். எனக்கு இந்தக் கிளார்க் வேலை வேணும். சார், இந்த ஆபீஸ்ல ஒரு பியூன் வேலை போட்டுக்குடுங்க சார். என்னோட அம்மாவுக்கு டீ. பி. சார். ஏதாச்சும் நான் சம்பாதிக்கக் குடுத்தாத்தான். என்னோட அம்மாவை உடனடியாக ஒரு ஆஸ்பத்திரியில சேர்த்துக் காப்பாத்த முடியும்.''

—மருதாசலம் அழுதே விட்டான்.

''இந்தா... மிஸ்டர். இந்தக் கதையெல்லாம் இங்க வேணாம். வெளியே போ, கெட் அவுட். இந்தாப்பா ராமசாமி இந்தா இவனை வெளியே இழுத்துக்கிட்டுப்போ, போக மறுத்தான்னு கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளு.''

---

மார்கரெட், பிளாஞ்ச் ஆகிய இரு பெண்மணிகளும் 1936—ல் லண்டனில் ஒரே ஆஸ்பத்திரியில் ஒரே நாளில் பெண் குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். அவர்கள் டிஸ்சார்ஜ் ஆகி வீடு திரும்பும்போது தவறுதலாக ஒருவர் குழந்தையை மற்றவர் எடுத்துச் சென்று விட்டனர். ஏழு வருஷம் கழித்துத்தான் உண்மை தெரிந்தது. ஆச்சரியமென்னவெனில், இருகுடும்பத்தினரும் சந்தித்துப் பேசித் தத்தம் வசமுள்ள குழந்தைகளையே வளர்த்து வர முடிவு செய்தனர் — பாசத்தைச் சொரிந்த குழந்தைகளுக்கு அதிர்ச்சி ஏற்படுவதைத் தவிர்க்க.

46 ஆண்டுகளுக்குப் பிறகு மார்கரெட் மரணப் படுக்கையில்தான் தன் மகளுக்கு உண்மையைத் தெரிவித்தாள். ஃபிளாஞ்சும் அதே நேரத்தில் தன் மகளிடம் பேசினாள். அச்சமயம் இரு பெண்களுக்கும் திருமணமாகிக் குழந்தைகளும் இருந்தன!

ஆதாரம்:— டிரிப்யூன்.

தகவல்:— மங்களம் ராமநாதன்.



**தாய்ப்பாசத்தை வென்ற வளர்த்த பாசம்**

கண்ணாடிக்கார அதிகாரியின் உத்தரவு உடனேயே பியூன் ராமசாமியால் அமுல் நடத்தப்பட்டது.

இதற்காகவெல்லாம் மருதாசலம் மனம் உடைந்து போய்விடவில்லை.

அந்தக் கண்ணாடிக்கார அதிகாரியின் வீட்டு முகவரியைத் தெரிந்து கொண்டு வீட்டிற்கே போய் விட்டான் மறுநாளே!

''இந்தாப்பா, உங்க அம்மா சாவக்கிடக் கிறாங்க, அது. இதுங்கிற கதையெல்லாம் எனக்குத் தெரியாது. உனக்கு வேலை இல்லேன்னு இல்லே. அதுதான் அன்னைக்கே ஆபிஸ்லயே சொல்லிட்டேனே. இப்ப வீட்டுக்கு வந்து கலாட்டா பண்றியே!''

—அந்த அதிகாரி உறுமினார்.

''இந்தாப்பா, நீ ஐயாயிரம் ரூபாய் எனக்குக் குடுத்தா வேலை உனக்குக்கிடைக்க பொரிக செய்யறேன். இல்லேன்னு அவ்வளவுதான்.''

—அந்த அதிகாரி லஞ்சம் கேட்கிறார் என்பதைப் புரிந்து கொண்ட மருதாசலம் அதிர்ந்து போனான்.

''ஐயா! டீ குடிக்கக் கூட காசு இல்லாத என்கிட்ட எப்படி அய்யா அவ்வளவு பணம் கிடைக்கும். அவ்வளவு பணம் இருந்தால் தான் இப்ப சாகக் கிடக்கிற என் அம்மாவைக் காப்பாத்திடுவேனே. அந்தப் பணம் சம்பா திக்கத்தானே அய்யா நேர்மையா உழைக்க உங்கிட்ட ஒரு ப்யூன் வேலையாவது கேக்குறேன்.''

—மருதாசலம் தன் முடியாமையைக் கூறிப் புலம்பினான். கெஞ்சினான்.

''பணமே குடுக்க முடியாதுன்னு, என்னை என்னதான் செய்யச் சொல்றே. வெளியிலே போ.''

—விரட்டினார் அந்தப் பெரிய மனிதர். மறுத்துக் கெஞ்சிக் கொண்டிருந்தபோதே மருதாசலத்தைப் பிடித்துக் கொண்டு போக போலீஸ் வந்து விட்டது.

இவன் வீடுதேடி வந்து மிரட்டிக் கலாட்டா செய்வதாக நூறுக்கு அந்தப் பெரிய பொறுப்புள்ள அதிகாரி போன் செய்து ரகசியமாக வரவழைத்துப் பிடித்துக் கொடுத்தது மருதாசலத்துக்குப் புரிந்து விட்டது.

கழுத்தில் அடி வாங்கிக்கொண்டு இழுக்கப்பட்டு வெளியேற்றப்பட்டான் மருதாசலம்.

மருதாசலம் போலீஸ் ஸ்டேசனிலிருந்து விடுதலை ஆகிப் போவதற்குள் அவனுடைய அம்மாவின் உடல்நிலை மோசமாகி ஆஸ்பத்திரியில் சீரியஸ் வார்டில் சேர்த்திருந்தார்கள் பக்கத்துக் குடிசைக்காரர்கள்.

மருதாசலம் விஷயத்தைக் கேள்விப்பட்டு ஆஸ்பத்திரிக்குப் போவதற்குள் அந்த அபாக்கியவதி கண்ணை மூடிவிட்டிருந்தாள்.

''சர்... சர்... சர்... ஸ்...''— ஒரு பளபள கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்த மருதாசலம் விரலில் கத்திபட்டு இரத்தக் காயம் ஏற்பட்டு விட்டது.

தன்னை அவமானப்படுத்தியது மட்டுமல்லாமல் போலீஸில் மாட்ட வைத்தும், அம்மாவின் சாவிற்கும் காரணமாகி விட்ட அந்தக் கண்ணாடிக்கார அதிகாரியை எதிர் பார்த்துத்தான் அவன் இந்தப் போர் தவம் புரிந்து கொண்டிருந்தான்.

ஸ்கூட்டரில் அந்த அதிகாரி தினமும் தன் பங்களாவிலிருந்து தன் ஆபீஸிற்கு

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## மீண்டும் ஹெர்பி

☐ மனித இதயம் படைத்த ஹெர்பி என்ற குட்டிக் கார் மூன்று வால்ட் டிஸ்னி திரைப்படங்களின் கதாநாயகனாக நடித்து விட்டது. ''மூன்றாவது படமான ''ஹெர்பி ரைட்ஸ் அகெய்ன்'' சிரிக்க வைப்பதுடன் சிந்திக்கவும் இடம் தருகிறது. வெட்ட வெளியே இல்லாமல் எங்கும் அடுக்குமாடிக் கட்டிடங்களைக் கட்டிக் கொண்டு போவதற்கு நயமாக எதிர்ப்புத் தெரிவிக்கிற படம் இது.

பணத்தையே முக்கியமாகக் கருதும் ஹாக் என்ற செல்வந்தன் 130 மாடிக் கட்டிடத்தை எழுப்ப நினைக்கும்போது அதற்கு நிலத்தின் உரிமையாளரான மூதாட்டி இடம் தர மறுக்கிறார். பணத்தைக் காட்டி அவரைப் பணிய வைக்க முடியாதபோது மிரட்டல் தொடர்கிறது: சூழ்ச்சிகளும் நடக்கின்றன.

மூதாட்டிக்குத் துணை நிற்பவர்கள் நிக்கோல் என்ற ஓர் அழகிய பெண்ணும் ஹெர்பி என்ற ஃபோக்ஸ்வேகன் காரும். இவர்களைச் சமாளித்து வெற்றி பெறச் செல்வந்தன் தன் மருமானை அனுப்புகிறான். ஆனால் 'மருமான் ஒயிட்ஃபீல்டுக்கும் நிக்கோலுக்கும் காதல் உருவாக... செல்வந்தன் ஹாக்குக்குக் கோபம் அதிகரிக்க....

பல போராட்டங்களுக்குப் பிறகு இறுதி வெற்றி ஹெர்பிக்கும் காதலர்களுக்கும்தான். ஹெர்பி, காதலர்களின் தேன் நிலவு வாகனமாக மாறுகிறது! —த. மு. ரா.



இந்த வழியாகத்தான் செல்வது வழக்கம். இன்றைக்கு வரும்போது ஸ்கூட்டரைத் தடுத்து நிறுத்தி யாரும் சந்தேகப்படாத வகையில் சாலை நீட்டுகிறவனைப் போலச் சென்று கத்தியால் தீர்த்துவிட முடிவோடு தான் மருதாசலம் காத்திருந்தான்.

''அதோ! வந்துவிட்டான் அந்தக் கண்ணாடிக் கார அதிகாரி...''

—தனக்குள் உச்சரித்துக்கொண்டே அவன் கத்தியை எடுத்துத் தயார் செய்து கொண்டான். அவனது திட்டத்திற்கு ஒத்துழைப்பது போலவே யாரும் அந்தச் சமயத்தில் அந்தச் சாலையில் நடமாடவில்லை.

ஆவேசத்தோடு கத்தியை எடுத்து அதைத் தன் சாலை வண்டியில் லகுவாக எடுக்கும்படி வைத்துக் கொண்டு முன்னேறினான்.

இன்னும் பத்தடிதான் மிச்சம்!

''ஆ! ஐயோ... அம்மா!'' — ஸ்கூட்டரிலிருந்து அந்தக் கண்ணாடிக்கார அதிகாரி கீழே விழுந்து கையையும் காலையும் உதைத்துக் கொண்டார்.

வாயிலிருந்து நுரை வழிந்தது. காக்காய் வலிப்பு வந்து விழுந்து விட்டார் என்பதை உணர்ந்து மருதாசலம் தான் கத்தியால் குத்தப்போகும் கொடூரச் செயலை நிறுத்தி விட்டான். இரக்க உணர்வினால் அவன் சில விநாடிகள் மௌனம் சாதித்தான். கத்தியால் குத்திக் கொலை செய்யாவிட்டாலும் கூட அவரே காக்கா வலிப்பு அதிகமாகிச் செத்துவிடலாம்.

அதேபோல் இது தக்கசமயம் கத்தியால் குத்தி விடவும், ஆனால் அவன் மனம் என்னவோ ஸ்டிரைக் செய்தது. கொலையா? கருணையா?

கத்தியை எடுத்தான். அவசர அவசரமாக அந்தக் கண்ணாடிக்கார ஆசாமியின் இரண்டு கைகளையும் கத்தியின் இரும்புப் பிடியைப் பற்றிக் கொள்ளச் செய்தான்.

சில நிமிடங்களில் மூர்ச்சை தெளிந்து எழுந்தார் அந்த அதிகாரி — தனக்கு உதவி செய்தது மருதாசலம் என்று அறிந்து கூனிக் குறுகினார். கூட்டம் கூடிவிட்டது.

உயிரைக் காத்த உதவிக்குப் பரிகாரமாக ஆபீசிற்கு வரச்சொல்லி கிளார்க் வேலைக்குச் சிபாரிசு செய்வதாகக் கூறினார்.

''வேண்டாம்''—அலட்சியமாகச் சொல்லி விட்டு அந்தச் சாலை நீட்டும் வண்டியைத் தோள்மீது வைத்துக் கொண்டு எதிர்த்திசையில் நடந்தான்.

ஒரு சாயபுவிடம் வாடகைக்கு வாங்கி வந்து பிறகு திருப்பித் தந்து விடுவதாகத் தான் ஒப்பந்தம் செய்திருந்தான். ஆனால், இப்போது இனி தனக்குச் சொந்தமாகவே விலை கொடுத்து வாங்கி இதே தொழில் செய்யும் முடிவுடன் கம்பீரமாக நடந்து கொண்டிருந்தான் மருதாசலம்!

# இப்பொழுது!

## சற்று அதிக விலையில் இரு மடங்கு எடையுள்ள டிட்டர்ஜெண்ட் சலவைக் கட்டிகள்

அதிகப்படியான சலவை செய்யும் டிட்டர்ஜெண்ட கட்டிகள்

சிக்கன முறையில் சலவை செய்யும் சோப் பார்கள்.

நிகரமான எடை 300 கிராம்கள்

**டோட்டல்**
நீலநிற டிட்டர்ஜெண்ட் பார்







தரமான தயாரிப்பினை வழங்குவோர்:
கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட்ஸ் லிமிடெட்
பெங்களூர்

விற்பனை செய்வோர்:
மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட் பெங்களூர்

## 27

முற்றத்தைக் கடந்து குறட்டின் மேல் ஏறி ரேழியில் வந்து நின்றபோது லக்ஷ்மியின் புடவையும் ரவிக்கையும் முழுவதும் நனைந்து உடலோடு ஒட்டிக் கொண்டிருந்தது.

கோவில் சிலையை ஞாபகப்படுத்திய அந்தக் கரிய கரிய புஜத்தையும் அபரிமித மார்பையும், ஒட்டிய வயிற்றையும், படர்ந்த தொடைகளையும் ஒரு விநாடிப் போதில் பார்வை கிரகித்துக் கொண்ட கூச்சத்துடன் அவன் சொன்னான்:

''ஓ, நன்னா நனைஞ்சுட்டேளே?''

அவள் அலட்சியமாக அவிழ்ந்து தொங்கிய தனது தலைமயிரை முறுக்கிப் பிழிந்தபடி சிரித்தாள்.

''அதனாலே என்ன, கரைஞ்சா போயிடுவேன்?''

தூண் மேல் சாய்ந்து நின்ற அவளை, அவளையும் மீறிக்கொண்டு கண்கள் ஆராய்ந்தன. மெல்லிய வாயில் சேலையிலும் மலிவான வெள்ளை மல் ரவிக்கையிலும் கிட்டத்தட்ட நிர்வாணமாய், அதைப் பற்றிய எந்தக் கூச்சமும் இல்லாமலோ அல்லது வேண்டுமென்ற திண்மையுடனோ நின்றிருந்தாள். இரண்டு கைகளும் பின்புறமாய்த் தூணைப்பிடித்து, மார்பு முன்புறம் நிமிர்ந்த நிலையில்—

அவன் சட்டென்று பார்வையைத் திருப்பி உள்ளறைக்குச் சென்று தெருவைப் பார்த்தபடி இருந்த ஜன்னலருகில் நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்தான். மார்பு லேசாகப் படபடத்தது.

'அவகிட்ட நீ கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும்!'

அவன் தனக்குள் சிரித்தபடி ஒரு புத்தகத்தை எடுத்து வாசிக்க ஆரம்பித்து அதில் ஆழ்ந்த சில நிமிஷங்களில் திடீரென்று உணர்வுகள் உலுக்கப்பட்டவனாய் நிமிர்ந்



தான். லக்ஷ்மி அறைக்குள் நுழைந்திருந்ததை உணர்ந்து சுழன்று திரும்பினான்.

லக்ஷ்மி ரவிக்கையைக் களைந்து ஈரத் தலைப்பால் தோளைப் போர்த்திக் கொண்டிருந்தாள். அவன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு கேட்டான்.

''என்ன வேணும்?''

''அத்தையுடைய புடவை ஏதாவது இருக்குமா? இல்லேன்னா ஒரு உலர்ந்த வேஷ்டி கொடுங்கோ. சுத்திக்கறேன். குளிர்றது. ரவிக்கையைக் காயப் போட்டிருக்கேன்!''

அவன் தலையை நிமிர்த்தாமலே உக்ராண அறையில் அத்தையின் பையில் இருந்த இரண்டு புடவைகளில் ஒன்றை எடுத்து வந்து நீட்டினான்.

நீட்டிய அவன் கையைச் சட்டென்று அவள் பிடித்துக் கொண்டாள். அதை அவன் கிரகித்துக் கொள்வதற்கு முன் ஒரு வேகத்துடன் அவனை அணைத்துக் கொண்டாள். எதிர்பாராமல் தடுமாறி அதிர்ந்துபோன அந்த விநாடியில் ஈர உடையிலும் அவள் உடம்பில் இருந்த உஷ்ணம் அவனுள் ஒரு திகைப்பை ஏற்படுத்தியது.

சரேலென அவன் விலகிக் கொண்டான். காரணம் புரியாமல் ஒரு கோபமும் அவமான உணர்வும் பகபகவென்று நெஞ்சுள் பொங்

# ஒரு சங்கமத்தைத் தேடி

வாஸந்தி



கியது. சுவரைப் பார்த்தபடி அடங்கிய குரலில் சொன்னான்.

''புடவையை மாத்திண்டு மழை நின்னவுடனே வீட்டுக்குப் போய்ச் சேருங்கோ.''

மறு விநாடி அங்கு நிற்காமல் முன்னறைக்கு விரைந்து சென்று கதவை ஒருக்களித்துச் சாத்திக்கொண்டு அமர்ந்தான்.

வியர்த்திருந்த நெற்றியைத்துண்டால் துடைத்துக் கொள்ளும்போது கைவிரல்கள் லேசாக நடுங்கின. ஒரு ஆத்திரம் கனன்று எழுந்து நெஞ்சை அடைத்தது.

தி பிட்ச்! சரியான வெறி பிடித்தவள்! என்னிடமே கைவரிசையைக் காட்டிவிட்டாள். எல்லா ஆண்களும் வாலைக் குழைத்துக்கொண்டு வருவான்கள் என்ற எண்ணமா?

வெகு நேரத்துக்கு மார்பு படபடத்துக் கன்னங்களில் சூடு பறந்தது. எதிர்பாராமல் அவமானப்பட்டாற்போல....

கூடத்தில் லக்ஷ்மி லேசாக விசும்புவது கேட்டது. அவனுள் எரிச்சல் ஏற்பட்டது. எதற்கு அழுகிறாள்? அவனுடைய பச்சாதாபத்தை எதிர்பார்த்தா? ஏமாற்றத்தினாலா?

திடீரென்று தாராவின் நினைவு வந்தது. ''என் கெட்டிக்காரத்தனத்தை வெச்சு, யாரை வேணா ஜயிக்கலாம்னு அது நாள்வரை தைரியமா இருந்தேன் கார்த்திக். அவன் என் மூளையை மழுங்கடிச்சு அவமானப்படுத்தி விட்டான்.''

வார்த்தைகள் ஒவ்வொன்றாக ஞாபகத்திற்கு வர அவன் கண்களை அகலமாய் விரித்து ஜன்னல் வழியே சரம் சரமாய் வழிந்த மழையில் எதையோ தேடினான்.

இன்றைக்குச் சமயத்தில் மூளை இயங்கியதால் லக்ஷ்மியிடமிருந்து விலகி வந்தேன். என் மூளையை மழுங்கடிக்க எந்தப் போதைப் பொருளும் தேவைப்பட்டிருக்காது. அவளது வெப்பமான ஸ்பர்சமே என் மூளையை மழுங்கடித்திருக்கும். வசம் இழக்கச் செய்திருக்கும். அப்படிப்பட்ட அனுபவத்திற்குப் பிறகும் லேசான குற்ற உணர்வைத் தவிர வேறு எந்தப் பாதிப்பும் எனக்கு இருந்திராது.

ஏனென்றால் நான் ஆண். இந்த அனுபவத்தால் என்னுள் எந்த விபரீத விளைவும் ஏற்படாது என்கிற மமதை உள்ளவன். தைரியம் உள்ளவன்.

'இட் இஸ் தி பயாலஜிக்கல் டிஃபரன்ஸ் தட் மேக்ஸ் எ வுமன் வீக்!''

மூளையின் நரம்புகள் சடசடவென்று முறிந்தாற்போல் அவனுக்குப் பிரமை ஏற்பட்டது.

''கார்த்திக்!''

அவன் திடுக்கிட்டு சுய உணர்வுக்கு வந்தான். கதவை முழுவதும் திறந்துகொண்டு அத்தை நின்றாள்.

''என்ன பண்றே இங்கே?''

''ஒண்ணுமில்லே'' என்றான் அவன் முகத்தை நிமிர்த்தாமல். ''நீங்க மழையிலே நனையல்லியே?''

''இல்லே. மழை நின்னப்புறம்தான் கோவில்லேந்து கிளம்பினேன். லக்ஷ்மி வந்தாளா என்ன?''

அத்தையின் குரலில் தொனித்த சந்தேகம் அவனுள் ஒரு கூச்சத்தைக் கிளப்பிற்று.

''சாப்பாடு கொண்டுவந்தாள். கொட்டற மழையிலே கொல்லைக் கதவைச் சாத்தறேன்னு ஒரேயடியாய் நனைஞ்சு...''

''கவனிச்சேன்'' என்றாள் அத்தை பரிவு இல்லாத குரலில். ''எம் புடவையைச் சுத்திண்டு போறதை. ரவிக்கையை வேறே இங்கே உலர்த்திட்டுப் போயிருக்கா...''

சுவாமி படங்களுக்கு முன் மாடத்தில் இருந்த அகல் விளக்குகளை அவள் மௌனமாக மறுபடி ஏற்றுவதை அவன் இருந்த இடத்திலிருந்து பார்த்தான். ஜோதியின் ஒளிபட்டு ஒளிர்ந்த கண்களில் ஒரு தீவிரம் தெரிந்தது. வேகமாகத் திருநீற்றை நெற்றியில் பூசியபடி, சன்னமான குரலில், இது உன் செவிகளுக்கு மட்டும் என்றாற்போல்—

'பொய்யாயினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
அஞ்ஞானந்தன்னை அகல்விக்கும் நல்லறிவே!
ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள் தருவாய்!''

இதோ என் சரணாகதி என்றாற்போல் குரல் உருகிற்று. நெகிழ்ந்தது. நான் ஒரு தூசு என்கிற பவ்யம் தொனித்தது. ஆத்ம சுத்தி வேண்டி நின்ற மாதிரி.

அவனுள் ஒரு சிலிர்ப்பேற்பட்டது. இவளுடைய ஆத்ம பலம் இவளாக ஏற்படுத்திக் கொண்டது என்று தோன்றிற்று.

''விசாலம் மாமியோட மருமான் நீ. தப்புத் தண்டாவுக்குப் போக மாட்டே!''

அவனுக்குச் சிரிப்பு வந்தது. இன்றைய அவனது கட்டுப்பாட்டுக்கு இதுதான் காரணமா? இன்னும் தொடர்ந்து இரு நிமிஷங்களுக்கு லக்ஷ்மியின் ஆவேச உஷ்ணப் பிடியில் இருந்திருந்தால் அதில் அவன் உருகியிருக்க மாட்டானா?

எது தப்பு, எது சரி?

''சாப்பிட வறியா?''

அத்தையின் குரல் ஜீவனில்லாமல் க்ஷீணித்துக் கேட்டது. அவனுள் ஒரு விசனத்தை ஏற்படுத்திற்று.

அவன் எழுந்தான். வாழை இலை விரித்து அத்தை பரிமாற ஆரம்பித்தான்.

''நீங்க சாப்பிடல்லியா அத்தே?''

''இன்னிக்கு எனக்கு உபவாசம்.''

பம்பாய் டெலிபோன் இலாகாவிற்கு ஜெயந்த் என்பவர் தனக்கு டெலிபோன் இணைப்பு தேவையென விண்ணப்பித்திருந்தார். இதுவரை அவருக்கு டெலிபோன் இணைப்புகொடுக்கப் படவில்லை என்றாலும், சமீபத்தில் வெளியிட்டிருந்த டெலிபோன் டைரக்டரியில் அவருடைய பெயரையும், டெலிபோன் நெம்பரையும் குறிப்பிட்டிருந்தார்கள். அதுமட்டுமின்றி 1982 டிசம்பர் முதல் 1983 மே மாதம் வரை அவர் டெலிபோனை உபயோகித்ததாக 853 ரூபாய் டெலிபோன் பில் கட்டச் சொல்லித் தகவல் அனுப்பியிருந்தார்களாம்.

—அ. குமார்.
(இந்துஸ்தான் டைம்ஸ்.)



**ஜெயந்தின் தொல்லை!**

இது திடீர் தீர்மானம் என்று அவன் நினைத்துக்கொண்டான். சாதத்தை அழுத்தமாய்ப் பிசைந்துகொண்டே அவன் மெல்லிய கோபத்துடன் கேட்டான்.

''யாருடைய தப்புக்காக நீங்க உங்களையே தண்டிச்சுக்கறேள், சங்கராச்சாரியார் மாதிரி?''

''சிவ சிவ! அவரையும் என்னையும் ஒரே தராசில் நிறுத்தாதே!''

''அப்ப என்னையும் நாச்சாமியையும் ஒரே தராசுல நிறுத்தாதீங்கோ! லக்ஷ்மி இங்கே வந்தபோது நீங்க நினைக்கிற மாதிரி ஒண்ணும் நடந்துடல்லே!''

அத்தையின் முகத்தில் தசைகள் இளகின. அதரங்களில் ஒரு புன்னகை கூட அரும்பிற்று.

''நா நினைக்கிறதா நீ எப்படிச் சொல்றே?''

''யோசிக்கத் தெரிஞ்ச நாள்லேர்ந்து உங்களை ஸ்டடி பண்ணிண்டு வரேன். உங்க மனசுலே என்ன தோணும்னு எனக்குத் தெரியும்!''

அத்தை வாய் விட்டுச் சிரித்தாள்.

''அந்தப் பெண் கிட்டத்தான் எனக்கு நம்பிக்கை இல்லே. அந்த மாதிரி அவ போறதைப் பார்த்த உடனே எனக்குத் திக்குன்னுது!''

''எனக்கு சுயபுத்தி இருக்கு அத்தே!''

அத்தை சற்று நேரம் எதுவும் சொல்லாமல் தீவிர யோசனையில் இருந்தாள்.

''நாமெல்லாம் சாதாரண மனிதப் பிறவிகள் கார்த்திக்! சைத்தான் உள்ளே புகுந்துக்கறது ரொம்பச் சுலபம். அதை விரட்டியடிக்கச் சமயத்துக்கு புத்தி இயங்கணும்.''

அத்தை அவனைத் தீவிரமாகப் பார்த்தாள்.

''உன் புத்தி இன்னிக்கு இயங்கித்து. உபயோகிச்சே. புத்தியை உபயோகிக்க முடியாத மழுங்கின மயக்க நிலையிலே ஏதோ நடந்து போச்சுன்னு யாரைத் தப்புச் சொல்ல முடியும்?''

அவன் நிமிர்ந்து உட்கார்ந்தான். அத்தை விஷயத்திற்கு வருகிறாள்...!

''தெரிஞ்சே தப்புப் பண்ண அகல்யைக்கு மன்னிப்பு மாத்திரமில்லே. அஞ்சு மகா பதிவிரதைகளிலே ஒருத்தின்னு அந்தஸ்துக் கொடுக்கிற அளவுக்குப் பெரிய மனசு இருந்தது அந்தக் காலத்திலே. இப்பத் தெரியாம ஒருத்திக்கு நடந்துபோன தப்புக்கு, பார்வையே குறுகிப்போன குக்கிராமத்துக்கு நீ வந்து ஒளிஞ்சிண்டிருக்கே. தபஸ் பண்ண வந்தவன் மாதிரி...''

அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

''எனக்கு அறிவார்த்தமா எல்லாம் புரியறது அத்தே. தாரா மேலே தப்பில்லேன்னு புரியறது. ஆனா மனசு சஞ்சலப்படறது. ஏமாத்தப்பட்டாப்பலே...''

அத்தை நிதானமாகச் சொன்னாள்.

''ஏன்னா உனக்கு அந்தக் காலத்து காருண்யம் இல்லே. இந்தக் காலத்துத் தைரியமும் இல்லே....''

அவன் லேசாக அதிர்ந்தான். வெகு நேர மௌனத்திற்குப் பிறகு மெல்லக் கேட்டான்.

''அந்தக் குழந்தையை, குமாரை, உங்க பேரனு, அப்பாவுடைய பேரனு உங்களாலே ஏத்துக்க முடியுமா அத்தே?''

அத்தை அவனை மறுபடி தீர்க்கமாகப் பார்த்தாள்.

''முடியும்'' என்றாள் அழுத்தமாக.

''எனக்கு ரொம்ப நாளாத் தோணிண்டிருக்கு. கார்த்திக் — சாஸ்திரத்துக்கும், ஆசாரத்துக்கும், நம்ம மத்த எல்லாப் பிரமைகளுக்கும் மேலே இருக்கிற சத்தியமான விஷயம் காருண்யம் ஒண்ணுதான்னு தீர்மானமாத் தோணறது...''

அவன் தோளை அவள் மென்மையாகப் பற்றினாள்.

## சின்னதா ஒண்ணு!



அக்கவுண்டண்ட்:— டைப்பிஸ்டு கூட என்னப்பா தகராறு:?

சர்விஸ்மேன்:— டைப்ரைட்டர் முன் போர்ஷன்லே ஸ்கூட்டர்லே இருக்கிற மாதிரி சின்னதா ஒரு கண்ணாடி பொருத்தச் சொல்றாங்க சார்

—பழனி.

''இதப் பார், யாரோ பண்ணின தப்புக்கு அந்தக் குழந்தை என்ன பண்ணும்? யோசிச்சுப் பாரு. ஆயுசுக்கும் ஒருத்திக்குத் துணையாயிருப்பேன்னு தெய்வ சன்னிதியிலே சத்தியம் பண்ணியிருக்கே. அவளுடைய சுகத்திலேயும் துக்கத்திலேயும் எனக்கு சம்பந்தமில்லேன்னு சொல்றது என்ன நியாயம்? அவளுடைய இந்த நிலைமைக்கு நீயும் பொறுப்பில்லையா?''

கிட்டத்தட்ட இதே மாதிரியான தாராவின் வார்த்தைகள் அவனுக்கு நினைவுக்கு வந்தன.

அத்தை லேசாகப் புன்னகை செய்தாள்

''அப்புறம் ஒரு விஷயம். சில விஷயங்களை மறைக்கிறதினாலே பல பேருக்கு நல்லதுன்னா அதை மறைக்கிறதிலே ஏதும் தப்பில்லே!''

அவன் திடீரென்று தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள இயலாதவன் போல் அத்

தையின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தான். குலுங்கும் அவன் முதுகை மிதமிஞ்சிய கனிவுடன் அத்தை தடவினள். தனக்குத் தானே முணு முணுத்துக் கொண்டாள்.

''இப்படி ஒரு விபத்து நேர்ந்திருக்கவேண்டாம்தான். நேர்ந்தப்புறம் என்ன செய்ய முடியும்? கோர்ட்டிலே நீதிபதி காரண காரியங்களைச் சீர்தூக்கிப் பார்த்து நியாயம் சொல்ற மாதிரி பார்க்கணும். நம்மையே பாதிக்கிற விஷயத்திலே இது கஷ்டம்தான். சுய கௌரவம் குறுக்கே நிற்கிறதினுலே! பங்களாதேஷ் யுத்தம் நடந்தபோது நான் கேள்விப்பட்டிருக்கேன். - சண்டையின்போது எதிரியோட பலாத்காரத்திலே மானமிழந்த பெண்களை, பெத்தவாளும் புருஷன்களும் வீட்டிலே சேர்த்துக்க மாட்டேன்னுட்டாளாம். அதைக்கேட்டுநான் துடிச்சுப்போனேன். இது என்ன அநியாயம்னு பதறிப்போனேன். அந்த எதிரியை விட மனுஷத்தனமே இல்லாத இந்த மனுஷாளெல்லாம் கொடியவான்னு ஆத்திரப்படுவேன். கறை பட்டது அந்தப் பெண்கள் உடம்பு இல்லே. இவா மனசுதான் கறை பட்ட மனசு, சூன்யம் பிடிச்ச மனசுன்னு கோபப்படுவேன். பல ஹீனமானவனைப் பலமுள்ளவன் அமுக்கின மாதிரி, சரீர பலம் இயற்கையா இல்லாத காரணத்தாலே பெண்களை எப்படியெல்லாம் இந்த உலகம் ஆட்டிப் படைக்கிறதுன்னு துக்கப்படுவேன்...''

அவர்:— என் பையன் ''அப்பாநான் உனக்கு கஷ்டம் கொடுக்கமாட்டேம்ப்பா''—ன்னு முன்னே அடிக்கடி சொல்வான். இப்பத்தான் எனக்கு அர்த்தம் புரியுது!

இவர்:— என்ன புரியுது?

அவர்:— பாஸ் பண்ணினு காலேஜுக்கு அலையணும். இந்தக் கஷ்டம் எனக்கு ஏன்னு பையன் பெயிலாயிட்டான்.

கே.ஆர்.விஸ்வம்



கருணா மகன்

நாடி, நரம்பெல்லாம் ஒவ்வொன்றாய்த் தட்டி எழுப்பப்பட்ட மாதிரி பிரமை ஏற்பட்டது. அவன் திடுக்கிட்டான். மார்க்ஸிஸவாதி தாரா மாதிரியே தத்துவவாதி அத்தை பேசுகிறாள்! யுகம் யுகமாய்த் தொடர்ந்து வரும்காரணங்களுக்கான துக்கம்இருவருக்கும் பொது....!

''நம்ம வாழ்க்கையிலே ஒரு கட்டுக்கோப்பு இருக்கணுங்கறதுக்காக சாஸ்திரம், அனுஷ்டானம், கற்புங்கற சில நியதிகளை மனுஷாளா ஏற்படுத்தினா. இங்கிலீஷ்லே என்ன சொல்வே டிஸிப்ளின்பியே. அதுக்காக. ஆனு இந்த டிஸிப்ளினைக் கடைப்பிடிக்கணுங்கறதுக்காக மனுஷத் தனத்தை, காருண்யத்தை மறந்துடலாமோ? அப்படி மறந்தோம்னு நாம வெறும் கூடுகள்னு அர்த்தம். யோசனைத் திறன் இருந்தும் உபயோகிக்கத் தெரியாத கூடுகள்! மனுஷன்னு நீ உன்னைச் சொல்லிக்கணும்னு மனுஷத்தனமா யோசனை பண்ணணும்.''

அத்தை திடீரென்று சிரித்தாள்.

''நான் உபந்நியாசம் பண்ணல்லே. பத்து வார்த்தை சொன்னு ஒரு வார்த்தையாவது உள்ளே நுழையுமோன்னு பார்க்கறேன்.''

''பத்தும் நுழைஞ்சிண்டிருக்கு அத்தை!''

''அப்ட சரி, தூங்கு. நான் இன்னும் எதுவும் சொல்ல வேண்டியதில்லே.''

அவன் பாயை விரித்துக் கரிய போர்வையாய்த் தெரிந்த வானத்தை வெறித்தபடி படுத்திருந்தான்.

"I think, therefore I am.''

அத்தை டிஸ்கார்டேக்குப் பல படிகள் மேலே. மனுஷத்தனமான சிந்தனையைத் தான் ஏற்பாள். இல்லாவிட்டால் நீ வெறும் கூடு என்பாள்....

அவன் வெகு நேரம் தூக்கம் வராமல் புரண்டு கடைசியில் ஆழமில்லாத தூக்கத்தில் ஆழ்ந்தான். இருண்டிருந்த இடத்தில் அத்தை தீப்பந்தத்தை ஏந்தி நின்றாள். முழுவதும் வெளிச்சம் தெரியாதது போல் அந்த வெளிச்சத்தை மயிரிழையாய்ப் பிடித்துக் கொண்டு அவன் நகர்ந்தான். பாதையில் படிகள் தெரிந்தன. தோளில் மெத்தென்ற சுமை இருந்தது.

நாடி, நரம்புகள் எல்லாம் சிலிர்த்து எழுந்து அவன் 'மூஷிக வாகன மோதக ஹஸ்தா' என்று பெரிய குரலில் ஆரம்பிக்க, பல சிரிப்புக் குரல்கள் கேட்டன.-

''குருக்களாத்துக்குழந்தை மாதிரிஇல்லே''

''மதராஸிக் குழந்தை மாதிரி இல்லே!''

அவன் சட்டென்று விழித்துக் கொண்டான். பொழுது நன்றாகப் புலர்ந்திருந்தது. வானம் துப்புரவாக வெளுத்திருந்தது.

நேற்றைய மழையும், லக்ஷ்மியின் உஷ்ண மூச்சும் அத்தையின் உபதேசமும் கனவாய்த் தோன்றின.

அத்தை குளித்துச்சமையல் வேலையில் இருந்தாள். அவன் பல் துலக்கிவிட்டு வந்தபோது வாசலில் தந்தி சேவகன் நிற்பது தெரிந்தது.

(தொடரும்)

## அத்தியாயம் 29

"உங்களுக்குப் புத்தி கெட்டுப் போச்சுடா. அவனுங்களுக்குத் திருட்டு டீசல் கெடைக்கல்லே. மேல்சரக்குக்கெடைக்கல்லே. குடிக்கிறதுக்கும் கூத்தி ஆட்டத்துக்கும் துட்டு போறலை. அவங்க சம்பாதிச்சப்ப பங்கு குடுத்தானுங்களா? ஸ்டிரைக்குன்னு தோள்ல கை போட்டுப் பேசறுங்களே. உங்கள்ள எவனுச்சும் டீசல் துட்டுல பங்கு வாங்கியிருக்கிறீங்களாடா?"

"த்தோடா. இவுரு. வண்டி லாபத்துல கூலி ஆளுங்களுக்குப் பங்கு அள்ளிக் குடுத்துட்டாரு. லாரி டிரைவரைக் காட்டிப் பேசறுரு. மேல் பாரம் ஏத்தினு கூலி ஆள் டிரைவர் கிட்ட துட்டு வாங்கறது ஊர் தெரிஞ்ச சங்கதி. டிரைவரையும் கூலி ஆளையும் பிரிக்க நினைக்காதே."

"கூடிக்கிங்கடா. கூடி முடிஞ்சதைப் பாருங்க். வயிறு காஞ்சா வருவீங்க."

"தோழர்களே, பளு தூக்கும் வீரத் தோள் கொண்ட மறவர்களே. வயிறு காய்ந்தால் வழிக்கு வருவீர்கள் என்று சொன்னாராம் ஒரு லாரி முதலாளி. வசதி படைத்தவன், வயிறு பெருத்தவன் பேசுகிறான். வயிறு காய்ந்தால் வருவீர்கள் என்று கொக்கரிக்கிறான். ஆமாம், வயிறு காய்ந்தால் வருவோம். உன் கடை வாசலை நோக்கி வருவோம். வழக்குப் பேச அல்ல. வாய்தா கேட்பதற்கு அல்ல. வெற்றுச் சமாதானம் பேசுவதற்கல்ல. எங்கள் வயிறு எரியும் வேதனையை உன் மீது கொட்டுவதற்கு வருவோம். எங்கள் அடி வயிற்றுத் தீயை உன் கடை மீது வீசுவோம். தாங்குவாயா வடதேசத்து வணிகனே! தமிழ் மறவர் கூட்டம் சீறும், புலியெனப் பாயும்."

வடிவேலு மாலைக் கூட்டத்தில் பேசினான்.

கப்பல் ஒதுங்கிற்று. நூற்றுக் கணக்கான ரப்பர் பால் பேரல்கள் கரையில் இறங்கின. சுங்கச் சாவடியில் எந்த இடைஞ்சலுமின்றிக் காகிதங்களில் கையெழுத்திடப் பட்டன. இரண்டு நாளில் அத்தனையும் வெளியேறிவிட வேண்டும். நாற்பத்தி யெட்டு மணி நேரம் தவணை. அத்தனையும் ஹார்பரை விட்டு வெளியேறினால் நல்லது. இல்லையெனில் ஒரு கிலோ எடைக்கு ஒரு நாளைக்குநாற்பதுபைசா டெமரேஜ் விதிக்கப்படும். ஏற்கனவே அதிக விலை, கப்பல் கட்டணம். இந்த ஹார்பர் அபராதம் வேறு எதற்கு?

ஒரு லாரிக்கு முப்பது பேரல் வீதம் ஆயிரம் பேரல் இறங்க எத்தனை லாரி தேவைப்படும். – விஸ்வநாதன் கணக்குப்

பாலகுமாரன்



# இரும்பு குதிரைகள்

போட்டான். நாலு கிளார்க்குகள் புடை சூழத் தண்ணித் தொட்டித் தெருவுக்குப் புறப்பட்டான்.

காயத்ரியை இன்று பார்க்கலாம். மரியாதையாய்க் கை கூப்பலாம். மெல்லமாய்க் கிளறிக் கோபம் ரசிக்கலாம். தண்ணித் தொட்டித் தெருவில் கார்விரைவாய்த் திரும்பியபோது தட்டென்று என்னவோ உதைத்தது. ஏன் தெரு காலியாய் இருக்கிறது?

காந்திலால் கம்பெனி பாதிக் கதவு அடைத்திருந்தது. காயத்ரி மட்டும் உள்ளே இருந்தாள். இவன் நுழைந்ததும் வரவேற்றாள். விஷயம் கேள்விப்பட்டதும் ''இம்பாஸிபிள்'' என்றாள். பதிலுக்கு அங்குள்ள சூழ்நிலையைச் சொன்னாள். விஸ்வநாதன் இடிந்து போய் உட்கார்ந்தான். தன் ஆபீஸுக்குப் போனில் பேசினான். யாரோ உரத்த குரலில் விஸ்வநாதனை ஏசிக் கொண்டிருந்தார்கள். போனின் இரைச்சல் தாளாமல் விஸ்வநாதன் காதிலிருந்து ரிஸீவரை அகற்றி தன் எதிரே வைத்துக் கொண்டான். எதிர் முனை இரைச்சல் அங்குள்ள எல்லாருக்கும் கேட்டது.

''என்ன லயஸன் ஆபீஸர் நீ. லாரி ஸ்டிரைக் பற்றி அங்கு போகும் வரை தெரியாது என்று சொல்கிற நீ என்னவிதமான லயஸன் ஆபீஸர். ஊர் நடப்புத் தெரியாதவன் என்ன லயஸன் ஜாப் செய்ய முடியும். இடியட். இது முன்னமே நமக்குத் தெரிந்திருந்தால் கப்பல் சரக்கை விசாகப்பட்டினம் திருப்பியிருக்க முடியும். ஏன் சென்னையில் சரக்கு இறங்குவதையே பேப்பர் சரியில்லை என்று தாமதப்படுத்தி விருக்க முடியும். டெமரேஜ் எவ்வளவு கொடுக்க முடியும்? எத்தனை நாள் தர முடியும்? கம்பெனிக்கு நஷ்டம் செய்யவே கங்கணம் கட்டிக் கொண்டு வேலை செய்கிறீர்கள். என்னால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியாது.



''விஸ்வநாதன், லிஸன்டு மீ. என்ன செய்வாயோ எது செய்வாயோ, சரக்கு இறங்கிய இரண்டு நாளுக்குள் நம் இடத்துக்கு வந்தாக வேண்டும். வழியில்லாமல் போகாது. முயற்சி செய். விடாது முயற்சி செய். ஸ்டிரைக் செய்கிறவன் யார் என்று பார். அவனிடம் பேசு. செலவு முக்கியமில்லை. உற்பத்தியும் நேரமும் முக்கியம்.

அங்கே உட்கார்ந்து கவிதை கிறுக்கிக் கொண்டிருக்காதே. ஆக்ட். ஆக்ட் ஐ ஸே. கவிதையும் கதையும் எழுதுகிறவனெல்லாம் வேலைக்கு வந்து கம்பெனியின் தாலியை அறுக்காதீர்கள். பதில் பேச வேண்டாம். விஸ்வநாதன். உன் கவிதையை பற்றிப் பேசியது வருத்தமென்றால்...

ஸைலன் த ஜாப் அண்ட் கெட் லாஸ்ட்.'' மறு முனையில் போன் ஆத்திரத்துடன் வைக்கப்பட்டது.

விஸ்வநாதன் தலையைக் குனிந்தபடி இரண்டுகைகளிலும் ரிஸீவரை எதிரே பிடித்தபடி உட்கார்ந்திருந்தான். முகம் கன்றிப் போயிருந்தது.

அங்கே உட்கார்ந்து கவிதை கிறுக்கிக் கொண்டிராதே. செவிப் பறையில் இந்த வாக்கியமே மறுபடி மறுபடி அதிர்ந்தது. எங்கே சறுக்கினாலும் ஆபீஸ் இவனைத் தாக்குகிற இடம் இங்குதான். சட்டென்று இவன் கவிதையைத்தான் வெட்டி எறிகிறார்கள்.

கிரிக்கெட் ஆடுகிறவனுக்குச் சில ஆபீஸ்களில் மரியாதை இருக்கிறது. இதற்காகவே வேலை தரப்படுகிறது. விளையாட்டில்வல்லவன் என்பதற்காகவே வேலை தரும் இடங்களும் உண்டு ஆனால் கவிஞனுக்கு யாராவது கவிதைக்காக வேலை தருவது உண்டா? எழுதுகிறவனை எந்த அலுவலகமாவது போற்றி வைத்துக் கொண்டிருக்கிறதா? கவிதை எழுதுகிறவன் சோம்பேறி என்று இவர்கள் எண்ணமோ?

உழைப்புக்கே குதிரை யென்ற
பெரும்போக்கு ஒரு நாள் உடையும்

விஸ்வநாதனுள் டைப்ரைட்டர் ஓடத் துவங்கியது.

குரங்குகள் மனிதர் போல
வளர்ந்தது உண்மையாயின்
குதிரையும் ரூபம் மாறும்.
உடல் மட்டும் மனிதர் போல
மடிமீது வீணை போட்டு
மழைக்கான வேதம் பாடும்.
இரு காலில் புனி சர்ப்பை
ஏந்திய குதிரைப் புத்தி
உலகத்தின் மாயை மாற்றும்
சகலமும் கவிதையாகும்.
குதிரைகள் மாறும் ஒரு நாள்
குரங்குகள் மடியும் அன்று

விஸ்வநாதன் ரிஸீவரை மிருதுவாய் அதன் இடத்தில் வைத்தான். காயத்ரி இவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். இத்தனை வயசுக்குப் பிறகும் ஏன் இவ்வளவு மிருதுவான மனசாய் இருக்கிறான் என்று கேட்டுக் கொண்டாள். வசவுகளைத் துடைத்துப் போடத் தெரியாமல் ஏன் தவிக்கிறாய். பதிலுக்குச் சீற்றம் கொள்ளாமல் ஏன் மௌனிக்கிறாய். உன் கவிதை காயப்பட்டது குறித்து வருத்தமா. உன் கவிதை தான் உன் ஈகோவா. அப்படி என்ன அற்புதக் கவிதை உன்னுடையவை.

சரி. இவன் கவிதை கிடக்கட்டும். ஆளே உடைந்து போய்ச் சிதறலாய் இருக்கிற போது கவிதையைப் பற்றி விசாரணை என்ன? இந்த நேரம் எப்படி உதவ முடியும் இவனுக்கு? இவனிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று நினைத்தேன். பேசாமல் மன்னிப்பை உதவியாக மாற்றினால் என்ன?

''மிஸ்டர் விஸ்வநாதன்!'' காயத்ரி மெல்லிய குரலில் அவனை அழைத்தாள்.

''உங்கள் நிலைமை, உங்கள் கம்பெனி நிலைமை முற்றிலும் புரிகிறது எனக்கு! பேசியவை அனைத்தையும் தெளிவாகக் கேட்க முடிந்தது. காந்திவாலே நீங்கள் இப்போது பார்ப்பதில் லாபமில்லை. மேலே என் வீட்டுக்குப் போய் உட்காருங்கள். இதோ சாவி. நான் அப்பாவை அழைத்து வருகிறேன். அப்பா ஏதும் செய்ய முடியும். ஏனெனில் இந்த ஸ்டிரைக்குச் கு யார் காரணமோ அவர் அப்பாவுக்குச் சம்பளம் தருகிறவர். நாம் யோசிப்போம்.''

விஸ்வநாதன் சிறிது நேரம் சலனமற்று இருந்தான். மெல்லியதாய்ச் சிரித்தான். அவளுடன் சமீபத்தில் செய்த கார் பயணம் நினைவுக்கு வந்தது. மறுபடி சிரித்தான்.

''மூன்றும் முறையாய் முட்டாள் என்று என்னை அழைக்க நான் வேறு ஒருசமயம்

---

ஆசிரியர்:— ''உங்க பையன் வருங் காலத்தில் சரித்திரத்தையே மாற்றி அமைக்கக் கூடியவனா வருவான்.''

மாணவனின் அப்பா:— ''அப்படியா?''

ஆசிரியர்:— ''ஆமா! பரீட்சையில் கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்தது யார்ங்கிற கேள்விக்கு ஜூடாஸ்னு பதில் எழுதியிருக்கான்!

உ. ராஜாஜி.



**சரித்திரப் புருஷன்**

உங்களுக்குச் சந்தர்ப்பம் தருகிறேன், மிஸ் காயத்ரி.இப்போது என்னைச் சற்றுத் தனியே விடுங்கள்.''

''மிஸ்டர் விஸ்வநாதன். மிகச் சில நாட்களிலேயே இந்த டிரான்ஸ்போர்ட் விஷயங்கள் அத்துப்படியானவள் என்கிற முறையில் பேசுகிறேன். உங்களை என் தந்தையின் நண்பராய்க் கருதிப் பேசுகிறேன். இங்கே நீங்கள் செய்யக் கூடியது ஏதுமில்லை — நான் சொன்னதைத் தவிர. போனமுறை நாம் பேசியது இலக்கியம். ஆளுக்கு ஆள் வேறுபடக் கூடிய ரஸனை விஷயம். அதையும் இதையும் பிணைக்க வேண்டாம். நான் பிறந்ததே உங்களை முட்டாள் என்றழைக்கும் சந்தோஷத்துக்காக அல்ல. எனக்கும் வேறு வேலைகள் உண்டு. உடனே உதவி செய்யவேண்டும் என்று தோன்றிற்று. அதனால்....''

''உங்கள் தந்தை எப்போது வருவார்?''

''உடனே... ஐந்து நிமிடங்களில்....''

''சாவி.''

''இதோ.''

''நன்றி. மிக்க நன்றி.''

''எதற்கு?''

''உங்கள் இரக்கத்திற்கு. உதவி செய்யும் மனப்பான்மைக்கு.இதன் பலன் எதுவேண்டுமானாலும் இருக்கட்டும். இந்த நேரம் உங்கள் பேச்சு இதமாய் இருக்கிறது என்பது உண்மை. உங்களைத் தவறாய்ப் புரிந்து கொண்டதற்கு மன்னிப்புக் கேட்கிறேன்.''

''நானும் மன்னிப்பு கேட்கிறேன் விஸ்வநாதன்.''

''எதற்கு மிஸ் காயத்ரி?''

''இதே காரணத்திற்காக.''

''புரியவில்லை.''

''அதைப் பிறகு பேசலாம். நீங்கள் வீட்டிற்குப் போய் உட்காருங்கள். நாம் பேசுவது ரகஸியமாய் இருக்க வேண்டும்.''

பத்து நிமிடத்தில் நாணு ஐயர் மாடிக்கு வந்தார். இருந்த ஒரே நாற்காலியில் உட்கார்ந்திருந்த விஸ்வநாதன் எழுந்து நின்றான். ''உட்கார், உட்கார்.''

காயத்ரி வந்தாள். பாயைப் பிரித்தாள். விஸ்வநாதன் நாற்காலியை நகர்த்திவிட்டுக் கால் மடக்கிப் பாயில் உட்கார்ந்தான். மற்றவர்களும் அமர விவரம் முழுவதும் சொன்னான்.

''முரட்டுப் பசங்களாச்சே எல்லோரும். ரொம்ப சிரமமாச்சேப்பா, எவ்வளவு செலவானாலும் பரவாயில்லேன்னு சொன்னா.... எவ்வளவு செலவு... வரைமுறை இருக்குமில்லையா...?''

விஸ்வநாதன் காதோடு ஒரு தொகையைச் சொன்னான்.

''பெரிசுதான். வடிவேலு காசுன்னா காச்சின இரும்பைக் கூடக் குடிப்பான். சரி, தனியா வடிவேலுகிட்ட உன் விஷயம் பேசறேன். நீ இங்க இருக்க வேண்டாம். காரை எடுத்துண்டு உங்க ஆட்களை நூரார்பருக்குப் போயிடச் சொல். அவங்க வேண்டாம் நாம பேசறச்ச. டெலிபோன் இருக்கிற ஒரு ஹோட்டலாப் பாத்து நீ சென்ட்ரல் கிட்டக்கப் போய்க் காப்பி சாப்பிடு. நான் வடிவேலுவைக் கூட்டிண்டு வர ட்ரை பண்றேன்.முடியலேன்னு நான் மட்டும் வந்து சொல்றேன். நீ இப்பான் கூட கிளம்பாதே. பத்து நிமிஷம் கழிச்சுக் கிளம்பிப் போ. யாராவது கேட்டா ஏதாவது தூரத்து உறவுன்னு சொல்லிடு. ஹோட்டல்லேர்ந்து வடிவேலு கடைக்குப் போன் பண்ண வேண்டாம். நீ பண்ண வேண்டாம். அங்க நெறைய பேர் இருக்கா. யார் வேணாலும் எடுக்கலாம். காயத்ரியைக் கூட கூட்டிண்டுபோ. அவ போன் பண்ணட்டும். எனக்குப் பண்ணட்டும். ட்ரை பண்ணுவோம். தைரியமாப் போ.''

நாணு ஐயர் கீழே இறங்கிப்போனார். பிறகு விஸ்வநாதன் வெளியேறினான்.

## நல்லசகுனம் ...



மனைவி:— ''பேங்கைக் கொள்ளையடிக்கப் போறேன்னு கிளம்பிட்டு வாசல்வரை போய்த் திரும்பிட்டியே... ஏன்?''

திருடன்:— ''சகுனம் சரியில்லே! பூக்காரி ஒருத்தி குறுக்கேபோயிட்டா!''

—உ. ராஜாஜி.

வீட்டைப் பூட்டிக் கொண்டு காயத்ரி படியிறங்கினாள். யானைக் கவுனி போலீஸ் ஸ்டேஷனுக்கருகில் விஸ்வநாதனுடன் சேர்ந்து கொண்டாள். இருவரும் ஆட்டோவில் ஏறினார்கள்.

கவுனி ஸ்டேஷன் வாசலில் இன்ஸ்பெக்டர் நாகராஜன் பல்விடுக்கிலிருந்து பிரினியைப் பிரியாத்துக் கொண்டிருந்தார். சட்டென்று நிமிர்ந்தார். நாணு ஐயர் பொண்ணு யார் கூட ஆட்டோவுல போவுது என்று யோசித்தார். இரும்புக் கம்பிகள் துருத்தித் தொங்க ஒரு லாரி கடக்க — ''சிவப்பு சிக்னல் பின்னால காட்ட, போய் நில்லு'' என்று கை காட்டினார். நாணு ஐயர் பெண்ணை மறந்துபோனார்.

ஆட்டோவின் வேகத்தில் காயத்ரியின் புடவைத் தலைப்பு படபடத்து விசுவின் நெஞ்சில் ஒட்டிக் கொண்டது.விசு சிரித்தபடி அதை நகர்த்தினான். (தொடரும்)



சமீபத்தில் கர்நாடக முதல்வர் ஒரு புதுமையைச் செய்தார். பெங்களூரில் அடிக்கல் நாட்டு விழா வொன்றில் கலந்து கொண்டு ஐந்து புதிய கட்டிடங்களுக்கு அதே இடத்தில் அடிக்கல் நாட்டினார்! சிவாஜி நகர் மைதானத்தில் வாசகம் பொறிக்கப்பட்ட அடிக்கற்களைத் திரை விலக்கித் திறந்துவைத்த பிறகு அந்த அடிக்கற்கள் கட்டிடங்கள் எழும்பப் போகும் பல்வேறு இடங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டன.

புதிய கட்டிடங்களின் அடிக்கற்களை அந்தந்த இடத்துக்கே சென்று திறந்து வைப்பதற்குப் பதில் இப்படி ஒரே இடத்தில் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து திறந்து வைத்ததால் நேரமும், ஏற்பாட்டுச் செலவுகளும் மிச்சமாயின. மேலும் மக்களுக்குப் போக்குவரத்துத் தடங்கல் குறைந்த பட்சமாயிற்று.

ஐந்து இடங்களில் திறந்துவைத்தால் ஐந்துமுறை செய்தி வெளியாகுமே. அந்த அளவுக்குத் தம் பிராபல்யம் கூடுமே என்று எண்ணாமல் மக்கள் நலனையே கருதி இப்படி நடந்து கொண்டிருக்கிறார் ஹெக்டே.

—அ. குமார்.



வெற்றிகரமாகப் பாத யாத்திரையை முடித்த ஜனதா தலைவர் நிருபர்களுக்கு அளித்த பேட்டி ஒன்றில் ''தங்களை மிகவும் கவர்ந்த அனுபவம் என்ன?'' என்ற கேள்விக்கு அளித்த பதில்:

''கேரள கிராமத்தில் ஓர் இரவு நாங்கள் தங்குவதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தபோது, திடீரென ஒரு வயதான அம்மாள் எங்களை அணுகினார். தமது கையில்



ஒரு விளக்கை வைத்திருந்தார். ஒன்றும் பேசாமல், தமது கடைக்குட்டி மகனின் கையைப் பிடித்துக் கொள்வது போல என் கையைப் பிடித்துக் கொண்டார்.

அவரது கண்களில் நீர்த்திரையிட்டு இருந்த போதும் ஒரு புன்னகையும் அவரது உதடுகளில் இருந்தது. அவர் எதுவும் பேசவில்லை. பேசினாலும் அவரது மொழி எனக்குத் தெரியாது. ஆனால் விளக்கின் ஒளியில் தெரிந்த அந்த வறண்ட முகத்தின் கண்கள், கிராமப்புற இந்தியாவின் கஷ்டங்களையும், துன்பங்களையும் பேசியதை என்னால் மறக்க இயலாது.

—''வீக் எண்ட் ரெவ்யூ''விலிருந்து
பொய்கை வி. தாமஸ்



எஸ்கார்ட் கம்பெனியிலும், டி. ஸி. எம். கம்பெனியிலும் 8 சதவிகித பங்கு வாங்கியதினால் பிரபலமாகியுள்ள ஸ்வராஜ்பால் ஒரு கோடீஸ்வரர். பஞ்சாபில் பரம்பரை பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவர். அமெரிக்காவில் இன்ஜினியராகப் பட்டம் பெற்றவர். எஃகு வியாபாரத்தில் நல்ல அனுபவம் உள்ளவர். 20 ஆண்டுகளுக்கு முன் தம் குழந்தைக்கு லுகீமியா நோய் வந்ததால் குணப்படுத்த இங்கிலாந்து சென்றார். குழந்தை இறந்து விட்டது. ஆனால் ஸ்வராஜ் பாலின் மனம் இங்கிலாந்தில் லயித்து விட்டது. ஒரு வங்கியிலிருந்து 5000 பவுன் கடன் வாங்கி, எஃகு வியாபாரத்தில் ஈடுபட்டார். ஹன்ட்டிங்டன் நாச்சரல் காஸ் அண்டு டியூப் கம்பெனியில் என்ஜினியராகவும் வேலை பார்த்தார். பிறகு அதே கம்பெனியை 60,000 பவுனுக்கு வாங்கினார். அன்று முதல் இன்று வரை தென்னாசியாவிலிருந்து மேற்கே கனடா வரையில் அவருக்குச் சுமார் 50 கம்பெனிகள் சொந்தம்.

இந்திராவும் மற்ற மந்திரிகளும் பிரிட்டன் செல்லும்போது ஸ்வராஜ்பாலைச் சந்திக்கா



மல் திரும்புவதில்லை.

உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டியில் வெற்றி பெற்ற இந்திய வீரர்களுக்கு தலா 40,000 ரூபாய் கொடுத்துள்ளார்.

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸில் வெளியாகியுள்ள ''திவாரி''யின் கட்டுரை

- வி. ராதாகிருஷ்ணன்





'கவிதை' என்ற சொல்லின் கடைசி எழுத்தை நீக்கிவிட்டால் கிடைப்பது—''கவி'' நடு எழுத்தை நீக்கிவிட்டால் கிடைப்பது—''கதை'' முதல் எழுத்தை நீக்கிவிட்டால் கிடைப்பது ''விதை'' முன்னிரு எழுத்துக்களையும் நீக்கிவிட்டால் கிடைப்பது ''தை''

ஆம். 'கவி'யின் கவிதை வெறும் 'கதை'யாக இல்லாமல் 'விதை'யாக நெஞ்சில் 'தை'க்க வேண்டும்.

''கவிஞர்'' காசி ஆனந்தனின் நூல் வெளியீட்டு விழாவில் 'கலைஞர்' மு. கருணாநிதி

- ரா. பாலசுப்பிரமணியம்

● ''கோபத்தை அடக்குவதற்கு என்னைப் பொறுத்தவரையில் ஓர் அனுபவ வழியுண்டு. முன்பு எனக்கு இருமல் தொந்தரவு இருந்தது. அப்போது தொண்டையில் நைப்பு இருப்பதற்காக, வாயில் கற்கண்டுக் கட்டியைப் போட்டுக் கொண்டிருப்பேன். என் அருகில் எப்போதும் ஒரு டப்பியில்கற்கண்டுக்கட்டிகள் இருக்கும். எனக்குக் கோபம் வருவதாகத் தோன்றும்போதெல்லாம் நான் ஒரு கற்கண்டுக் கட்டியை வாயில் போட்டுக் கொள்வேன். இன்னொன்றை எதிரில் இருப்பவருக்கு எடுத்துக் கொடுப்பேன். இதனால் என் வாய் மூடி அதில் இனிப்பு வந்துவிடும். கோபத்தின் காரம் மறைந்து விடும். எதிரில் உள்ளவருக்கும் நம்மிடம் இருக்கக் கூடிய மனக் கசப்பு மறைந்து இனிமையான எண்ணம் ஏற்பட்டு விடும். இது ஒரு நல்ல யுக்தி.''

—ஸ்ரீ வினோபா பாவே

தகவல்: ஆர். எஸ். சுப்பிரமணியம்



● சமீபத்தில் அமைச்சர் பதவி ஏற்ற செல்வி விஜயலட்சுமி அரசியலில் பிரவேசித்தது எப்படி?

மூத்த சகோதரன் குமாரன் அன்று திராவிட முன்னேற்றக் கழகம் துவக்கப்பட்ட நாளிலிருந்தே அதன் வளர்ச்சிக்காகத் தொண்டாற்றி வந்தார். கட்சியின் வளர்ச்சியைப் பொறுக்க மாட்டாத சிலர் அவர்மீது காழ்ப்புணர்ச்சி கொண்டனர். டவுனுக்குச் சென்றுவிட்டு அப்பாவும் அண்ணனும் மோட்டார் சைக்கிளில் திரும்பி வந்துகொண்டிருந்தபோது சிலர் துப்பாக்கியால் சுட்டும், கத்தியால் குத்தியும் கொடூரமான முறையில் இருவரையுமே கொலை செய்துவிட்டனர்.

கொலையைக் கண்டித்துக் கண்டனக் கூட்டங்கள் நடந்தன. இவற்றில் பங்குகொள்ள ஆரம்பித்த விஜயலட்சுமி அரசியலுக்கு வந்துவிட்டார். பிறகு தலைவரின் கட்டளையை ஏற்றுத் தேர்தலில் நின்று பதினாறாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றார்.

-ராஜா செந்தில்நாதன்



## அத்தியாயம் ஒன்று

தண்டபாணி காத்திருந்தார்.

கைகளைப் பின்புறம் கட்டிக் கொண்டு ஹாலின் ஒரு மூலையிலிருந்து மறு மூலைவரை நடந்து நடந்து திரும்பினார்.

எலெக்ட்ரானிக் கடிகாரம் பார்த்தார். 10-30. ஜன்னலுக்கு வெளியே சமுதாயம் சாப்பிட்டு முடித்துத் தூங்கத் தயாராய் இருந்தது.

டெலிபோன் நோக்கி நடந்தார். அருகில் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்து விட்டு டயல் சுழற்றினார். விரலிலிருந்து விடுபட்டு ஆண்ட்டி க்ளாக்வைஸில் டயல் டர்ர்ர்க் என்று தன் இடத்துக்கு வந்த சப்தம் மட்டும் அந்த ஹாலில் பெரிய சைஸில் ஒலித்தது.

''ஹலோ, நான்தான் ஷோபனாவோட அப்பா பேசறேன். ஏம்மா, சாந்தின்னு அவளுக்கு ஒரு ஃப்ரெண்ட் இருக்கா இல்லே? அவளுக்கு போன் இருக்கா? இல்லையா? சரி, அட்ரஸ் தெரியுமா உனக்கு? வெய்ட் பண்றேன்.''

பேனா எடுத்து மூடி சுழற்றி விட்டுக் காத்திருந்தார்.




# டேக் நம்பர்-2

பட்டுக்கோட்டை பிரபாகர்

''ம். சொல்லு...'' குறித்துக் கொண்டார்.

''ரொம்ப தாங்ஸ்ம்மா.''

ரிசீவரை வைத்து விட்டு சோபாவில் அமர்ந்தார். மாடிப்படி அருகே இருந்து அந்தக் குட்டி நாய் ஓடிவந்து அவர் மடிமேல் அமர்ந்து கொண்டது. அதன் தலையைத் தடவினார்.

''ராமு'' என்றதும் வந்தவனிடம் தண்ணீர் கொண்டுவரச் சொல்லிக் குடித்தார். வாசலில் ஜீப் வந்து நின்ற சப்தம் கேட்டதும் எழுந்தார்.

காக்கி உடையில் உள்ளே வந்தவரை, ''வாடா பாலு'' என்று கிட்டப் போய்க் கையைப் பிடித்துக் கொண்டார்.

''என்ன ஆச்சு தண்டபாணி?''

''என் ரூமுக்குப் போயிடலாம் வா.''

அறையில் ஏர்கண்டிஷனர் இயங்கிக்கொண்டிருந்தது.

தண்டபாணி கொஞ்ச நேரம் பேசாமல் இருந்துவிட்டு, ''எனக்கு இப்போ என்ன சொல்றதுன்னே தெரியலே பாலு'' என்றார்.

''நிதானமாச் சொல்லு. விவரத்தைச் சொன்னாத்தான் உனக்கு நான் ஏதாச்சும் செய்ய முடியும். நேற்று ராத்திரி பத்தரை



மணிக்குக் காப்பி சாப்பிடறதுக்காக ஒரு போலீஸ்காரனைக் கூப்பிட மாட்டே நீ. சொல்லு. ஷோபனா எங்கே தூங்கறாளா?''

''ஷோபனாவைக் காலையிலேர்ந்து காணும் பாலு.''

''வாட்? காணுமா? என்னப்பா நீ விளையாடறியா? சின்னப் பொண்ணு அவ?''

''அதனாலதான் எனக்குப் பயமா இருக்கு பாலு.''

''எங்கே போனா காலையிலே?''

''காலையிலே நான் எழுந்திரிச்சப்போ எட்டு மணி. வழக்கமா நான் ரூமை விட்டு வெளியில் வந்ததும் குட்மார்னிங் சொல்லிக்கிட்டு ரெடியா நிப்பா. இன்னிக்கு இல்லை. தூங்கிட்டான்னு நினைச்சு அவ ரூமுக்குப்போனேன். இல்லை. தோட்டத்திலே இல்லை. வீடு முழுக்கப் பார்த்தாச்சு. இல்லை. வேலைக்காரங்களைக் கேட்டா யாருமே பார்க்கலைன்னுங்க. என் கிட்டேசொல்லாம எங்கேயும்போகமாட்டா. எனக்குக் கவலையாப் போச்சு. ஆஃபீஸ் போகலை. மத்தியானம் வரைக்கும் வீட்லயே உட்கார்ந்திருந்தேன். வரலை. அப்புறம் அவ ஃபிரண்ட்ஸ் எல்லார் வீட்டுக்கும் போன் பண்ணி, ஆள் அனுப்பிப் பார்த்தாச்சு பாலு. இப்ப மணி ராத்திரி பத்தரை. கல்யாணம் ஆகவேண்டிய பொண்ணு. எனக்கு வயத்தைக் கலக்குது பாலு..''

பாலு சிகரெட் கொளுத்திக் கொண்டு நீட்டினார்.

தண்டபாணி மறுத்தார்.

உலகிலேயே இரண்டே இரண்டு நகைச்சுவை நடிகர்களுக்கு மட்டுமே சிலைகள் வைக்கப்பட்டுள்ளன.

ஒருவர்: சார்லி சாப்ளின்

மற்றவர்: கலைவாணர்.

—எஸ். விஜயா சீனிவாசன்



**இருசிலைகள்**

''நிதானமா இரு தண்டபாணி. சொந்தக்காரங்க வீடுகள்ல விசாரிச்சியா?''

''விசாரிச்சுட்டேன். ஒவ்வொரு நிமிஷமும் கடக்கிறப்போவும் எனக்குப் பயமா இருக்கு பாலு. மை ஒன்லி டாட்டர். போலீசுக்குப் போறதைப் பத்தி எனக்குக் குழப்பமா இருந்துச்சு. வயசுப் பொண்ணு. நாளைக்கு கல்யாணத்தையே பாதிக்கிற விஷயம் இல்லையா? அதனாலதான் பர்சனலா உன்னைக் கூப்பிட்டேன். சொல்லு, பாலு. என்ன செய்யலாம், எனக்கு எதுவும் புரியலை.''

''நீ நினைக்கிறது தப்பு தண்டபாணி. மேட்டரை வெளியே விடாமலேயே சில சமயங்களிலே போலீஸ் செயல்படத்தான் வேண்டியிருக்கும். காலையிலே ஒரு பத்து மணி வரைக்கும் பார்க்கலாம். அப்புறம் ப்ராப்பரா எங்க கிட்ட வந்துடு. இப்போ அதுக்குள்ள கொஞ்சம் யோசிக்கலாம். கொஞ்சம் ஒபனா சொல்லு. ஷோபனாவை எதுக்காச்சும் திட்டினியா, கடுமையாக் கண்டிச்சியா?''

''ஷோபனாவையா? நானா? கண்டிக்கிறதா? உனக்குத் தெரியாதா பாலு என்னைப் பத்தி. அவ முகம் கண்டினாலே பதறிப்போய்டு வேண்டா.''

''ஷோபனா ரூமை நல்லாப் பார்த்துட்டியா ஏதாச்சும் லெட்டர் எழுதி வச்சிருக்காளா?''

''பாலு, ஆர் யூ சீரியஸ்? யூ மீன்... அவ என்னை விட்டுக் கோபிச்சுக்கிட்டுப் புறப்பட்டுட்டாங்கறியா? இன்னொரு தடவை அப்படி கற்பனை பண்ணாதே ப்ளீஸ்...''

''தண்டபாணி, நீ பாசம் மிக்க தகப்பனா இந்த விஷயத்தைப் பார்க்கிறே. என் பார்வை அப்படி இல்லை. ஒவ்வொரு செயலுக்கும் ஒரு காரணம் இருந்தே ஆகணும். இல்லையா? ஷோபனா வீட்ல இல்லைங்கறது உண்மை. ஏன் இல்லைங்கறதுக்கு லாஜிக்கலா காரணம் கற்பிச்சுப் பார்க்கறேன். ஷோபனா கிட்டே நீ புரிஞ்சுக்காத பகுதி ஏதாச்சும் இருக்கலாமில்லையா? வா, அவ ரூமைப் பார்த்துடலாம்.''

பாலு பத்து நிமிஷத்துக்கு முன் சிகரெட்டாய் இருந்ததை ஆஷ்ட்ரேயினுள் அழுத்திவிட்டு எழுந்தார்.

''நோ, பாலு. அப்படி எதுவும் இருக்காது. எனக்கு அவளைத் தெரியும். என்கிட்டே எந்தக் கோபமும் இல்லை அவளுக்கு.''

''அப்படி எதுவும் இருக்க வேண்டாம்னு தான் நானும் விரும்பறேன். வா.''

இருவரும் ஷோபனாவின் அறைக்கு வந்த போது தண்டபாணி தயங்கி வாசலிலேயே நின்றுவிட்டார். பாலு உள்ளே வந்தார்.

மேஜை மேல் புத்தகங்கள் ஒழுங்காக அடுக்கப்பட்டிருந்தன. டிரெஸ்ஸிங் மேஜை மேல் எல்லாப் பொருள்களும் நீட்டாக இருந்தன. டிராயரில் நீல நிற லெட்டர் பாட், பேனாக்கள். லெட்டர் பாடை விரித்தார்.

Red is always Red
Green is always green
You are not always you

என்று அத்தனை நாள்களிலும் அச்சிடப்பட்டிருந்தது.

ஷோபனா எப்போதும்ஷோபனா இல்லையோ?

அடுத்த டிராயரில் எதிர் காலத்தில் மூத்திரைக் குத்து வாங்கப் போகிற நீலக் கடிதங்கள் இருந்தன. வந்த கடிதங்கள் அடுக்கப்பட்டு, ரப்பர் பாண்ட் போடப்பட்டிருந்தது. அவற்றை எடுத்தபோது–

அந்த அறையில் இருந்த டெலிபோன் ஒலிக்க ஆரம்பித்தது.

தண்டபாணி போனை நோக்கி அசலாக ஓடிவந்தார்.

''இரு தண்டபாணி'' என்று பாலு ரிசிவரை எடுத்தார்.

''ஹலோ'' என்று மட்டும் சொன்னது ஒரு ஆண் குரல்.

''ஹலோ'' என்று மட்டும் சொன்னார் பாலு.

''யார் பேசறது?'' என்பதில் கடுமை இருந்தது.

''யார் பேசணும்?''

''மிஸ்டர் தண்டபாணி.''

''தண்டபாணிதான் பேசறேன்.' நீங்க யாரு?''

''நான் யாருங்கிறது இப்போ உங்களுக்கு முக்கியம் இல்லே. என்கிட்டே உங்களுக்குத் தேவையான ஒரு சரக்கு இருக்கு. விலை பேசத்தான் கூப்பிட்டேன்.''

''என்ன சொல்றே?''

''மிஸ் ஷோபனா பத்திரமா என்கிட்டே இருக்கான்னு சொல்றேன்.''

''மை காட்! யார் நீ? எங்கேயிருந்து பேசறே?''

''டெலிபோன்லேர்ந்து பேசறேன். மறுபடிக் கேக்கறீங்களே,நான் யார்ன்னுதெரிஞ்சி என்ன லாபம் உங்களுக்கு?''

''என்ன பாலு, என்ன இது?'' என்று கிட்டே வந்த தண்டபாணியை ''உஷ்!'' என்று தடுத்தார் பாலு.

''சொல்லு, என்ன உன் நோக்கம்?''

''என் நோக்கம் இருக்கட்டும். பக்கத்திலே யாரு?''

''யாருமில்லையே...''

''நான் பேசிக்கிட்டிருக்கிறது தண்டபாணிக்கிட்டே இல்லே மிஸ்டர் பாலு. நீங்க யாரா இருந்தாலும் சரி, தண்டபாணி சார் கிட்டே சொல்லுங்க. நான் போன் பண்ணி அவரை விசாரிச்சதா. என் பேரம் அவரோடதான். அப்புறமா நான் அவரைத் தொடர்பு கொள்றேன். மிஸ்டர் பாலு.''

'டொக்' என்று எதிர் முனை கட்டாகியது.

''ஹலோ, வைக்காதீங்க... ஹலோ.... ப்ளீஸ் ஸ்பீக் அப்....'' என்று கத்திப்பார்த்து விட்டுச் சோர்வாய்ரிசிவரைவைத்தார் பாலு.

''இடியட். உன்னாலதான் எல்லாம். பேசிக்கிட்டிருக்கிறப்போ நடுவிலே நீ பேசினது கேட்டுடுச்சி. வச்சிட்டான். எத்தனை கவபமா இப்பல்லாம் கிட்நாப் பண்றாங்க.''

''முருகா! என் குடும்பத்திலேயா இப்படியெல்லாம் சோதனை! பேசாம நானே போனை எடுத்திருப்பேன். ஐயோ, அந்தப் பொறுக்கி என் கண்மணியை என்ன பாடு படுத்தறானோ... எங்கே வச்சிருக்கானோ...''

''பதறாதே தண்டபாணி. மறுபடி அவன் இப்ப போன் பண்ண வேண்டியிருக்கு. இது நல்லத்துக்குத்தான். சவபமா எங் கேருந்து பேசறான்கிறதைத் தெரிஞ்சுக்கலாம். எனக்குச் சவால் விட்டுட்டான். அவனைப் பிடிக்காம விடப் போறதில்லே நான்.''

''அவனை நீ பிடி. பிடிக்காம விடு. என் பொண்ணுல்ல எனக்கு முக்கியம். வேணும் பாலு. நீ விலகிடு. இந்த விவகாரத்திலே குறுக்கே வரவேணும் தயவு செஞ்சி. அவன் என்ன கேக்கப் போறான். நிச்சயமா பணம். யாருக்காக நான் சம்பாதிச்சேன்? எல்லாம் அவளுக்காக. அவன் கேக்கறதைக் கொடுத்துட்டு என் மகளை நான் மீட்டுக்கறேன். வேணும். எனக்குப் போலீஸ் தலையீடு வேணும். அது என் மகளுக்கு ஆபத்தா முடிஞ்சுடும்.''

பாலு சற்றுக் கடுப்புற்றார்.

''முட்டாள் மாதிரிப் பேசாதே. போலீஸோட திறமையைக் குறைச்சு மதிப்புப்போடாதே. ஒரு பைசா செலவில்லாம உன் பொண்ணை மீட்டுத் தரவேண்டியது என் னோட பொறுப்பு. மறுபடியும் அத்தனை சீக்கிரம் கூப்பிட மாட்டான்னு நினைக்கிறேன். அதுக்குள்ள நான் செய்ய வேண்டிய காரியம் நிறைய இருக்கு. ஒரு மணி நேரத்துக்குள்ளே திரும்ப வறேன். அதுக்குநடுவிலே போன் அடிச்சா நீ எடுக்காதே. வேலைக்காரன் யாரையாச்சும் எடுக்கச் சொல்லு. இப்ப என்ன மணி – பத்தே

குமரி மாவட்டத்தில் ''நல்லூர்'' என்ற கிராமத்தில் கோடைக்காலத்தில் மட்டுமல்ல சாதாரண நாட்களில்கூட ஒரு குடம் தண்ணீர் 35 காசு.

தமிழகத்திலேயே வெயிலின் கொடுமை அதிகமாக உள்ள ஊர்களில் ஒன்றாகிய விருதுநகரில் ''வெயில் உகந்த அம்மன்'' கோயில் உள்ளது.

—ஆயில்யன்.



ஊர்க் கதை

முக்கால். 'முதலாளி வெளியே போயிட்டார். பன்னெண்டு மணிக்குத்தான் திரும்பி வருவார்னு சொல்லச் சொல்லு. புரியுதா நான் சொல்றது? அதுக்குள்ளே உனக்கு வரப்போற காலே டிரேஸ் பண்றதுக்கும், ரெக்கார்ட் பண்றதுக்கும் ஏற்பாடு பண்ணிட்டு வந்துடறேன் நான்.''

சிகரெட் பாக்கெட்டையும், லைட்டரையும் பாண்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு அவசரமாகக் கிளம்பினார் பாலு.

''எனக்கென்னவோ நீ தலையிடறது...''

''ஷட் அப் தண்டபாணி. பயந்து சாகாதே. பணம் வாங்கற வரைக்கும் ஷோபனாவை எதுவும் பண்ண மாட்டான் அவன். உன் ஷோபனாவை உன் கிட்ட ஒரு கீறல் கூட இல்லாமச் சேர்க்கிறேன். நம்பிக்கையா இரு. எனக்கு நீ உதவினாத்தான் இதை நான் செய்ய முடியும்.''

'உதவப் போவதில்லை' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டார் தண்டபாணி.

''போன் அடிச்சா பன்னிரண்டு மணி வரைக்கும் நீ தொடவேதொடாதே. ரைட்?''

'நோ, நான்தான் போனை எடுக்கப் போகிறேன். போலீஸ் இதிலே நுழைஞ்சிருக்கிறது என்பது அவனுக்குத் தெரிந்தால் நிச்சயம் அதனால் என் மகளுக்கு ஆபத்து உண்டு. அவள் எனக்கு முழுசாக வேண்டும். எத்தனை பணம் கேட்டாலும் நான் தரத்தான் போகிறேன். உன்னுடன் நான் ஒத்துழைக்கப் போவதில்லை. ஸாரி பாலு.'

''சரி பாலு'' என்றார் தண்டபாணி.

இரண்டு நிமிடத்தில் சீறலுடன் ஜீப் புறப்பட்டு... சப்தம் கரைந்தது.

தண்டபாணி போனைப் பார்த்தார்.

அடியேன் சனியனே!

நான் பாலுவுக்குத் தெரிவித்திருக்கக் கூடாது. பாலு மட்டும் வராமல் இருந்திருந்தால் போனில் நான்தான் பேசியிருப்பேன். இந்நேரம் என் மகளை விடுவிக்கிற முயற்சியில் இறங்கியிருப்பேன். பணம் எனக்குப் பெரிதல்ல. ஷோபனாதான் முக்கியம்.

தண்டபாணி வியர்வையை ஒற்றிக் கொண்டு பதற்றத்தோடு காத்திருந்தார்.

தூரத்தில் வழி கேட்டு ஒலி கொடுத்துக் கொண்டு வாகனங்கள். திரைச்சீலைகள் விடுபட்டுப் பறக்கத் துடித்தன. மேஜை மீது டைம்பீஸில் குருவி மறுபடி மறுபடி தானியம் தின்றது. கறுப்பு டெலிபோன் அமைதி காத்தது.

பதினொன்றே காலுக்கு டெலிபோன் அடித்தது.

''ஹலோ தண்டபாணி பேசறேன்.''

''கல்கி ஆபீஸ்தானே அது? எடிட்டர் வேணும்.''

''ராங் நம்பர்.''

எரிச்சலுடன் வைத்தார். அப்புறம் அடிக்கவே இல்லை.

பன்னிரண்டே காலுக்கு பாலு வந்தார்.

''என்ன தண்டபாணி, கால் வந்துச்சா?''

''இல்லை, பாலு.''

''ஏதாச்சும் சாப்பிட்டியா?''

''இஷ்டமில்லைப்பா.''

''வா, கீழே போகலாம். ஏதாச்சும் சாப்பிடு.''

கீழே ஹாலுக்குவந்து ஃப்ரிஜ்ஜைத் திறந்து பிரெட்டும், ஆப்பிள் பழமும் பாலுவே எடுத்து வந்தார். சாவிக் கொத்தில் தொங்கின பேனாக் கத்தியை விரித்துப் பழத்தை நறுக்கி நீட்டினார்.

''பால் எடுத்துட்டு வரட்டுமாய்யா?'' என்றான் ஓரமாய் நின்ற ராமு.

''எடுத்துக்கிட்டு வா'' என்ற பாலு அவன் போனதும் சொன்னார், ''எல்லாம் செட் பண்ணியாச்சு. இதப் பாரு, தண்டபாணி, உனக்கு என் மேலே நம்பிக்கை வரலை. நான் நுழைஞ்சதும் ராமுவை விசாரிச்சேன். நீ அவனுக்கு போன் அடிச்சா எடுக்கச் சொல்லி இன்ஸ்ட்ரக்ஷன் கொடுக்கலை. ஆறு போன் அடிச்சது. நீ எடுத்தே. இந்த போனோட எக்ஸ்டென்ஷன்தானே மாடியிலே? லோ, முதல்லே என் வார்த்தையை நம்பு. நீயா தனிச்சுச் செயல்பட விரும்பாதே. அந்த கால் ராங் நம்பர். சரியா?''

தலையாட்டினார் தண்டபாணி.

''நான் போலீஸ்காரன் தண்டபாணி. உன் நன்மைக்காகத்தான் நான் சொல்றேன்.''

''எது பாலு நன்மை, என் மகள் எனக்குக் கிடைக்காமப் போறதா?''

''அதைப் பத்தித்தான் நீ கவலைப்படாதேன்னு சொல்லிட்டேனே.''

''பாலு, எனக்குப் பணம் போறது பெரிசில்லை.''

''ரைட். ஆனா தெரிஞ்சு ஒரு குற்றவாளியை நான் விட்டுட முடியுமா?''

''உன் திறமையைக் காட்டறேன்னு என் மகளின் உயிரோட விளையாடறே நீ. அவனுக்கு நான் போலீஸ் இன்ஸ்பெக்டர்கிட்டே சொல்லிட்டேன்கிறதும், நீ திட்டம் போடுறதும் தெரிஞ்சா....''

''உங்க அப்பாவும் அம்மாவும் காதல் மணம் புரிந்தவர்கள்தானே! அப்படியிருந்தும் நம் காதல் திருமணத்திற்குத் தடை சொல்கிறார்களே, ஏன்?''

''லட்சரூபா நகையுடன் எங்கம்மா ஓடிவந்தாளாம்! ஆனால், நீ?''

—சுதர்ஸன்.



அந்தக் காதல் உசத்திதான்!

''தெரியாது அவனுக்கு. இப்போ நான் சொல்றதை நீ கேளு. எந்தச் சமயமும் அவன் போன் பண்ணலாம். எடுத்து அவன் சொல்ற தெல்லாம் கேட்டுக்கிட்டு எல்லாத்துக்கும் சரி, சரின்னு சொல்லாம என் பொண்ணு உன் பாதுகாப்பிலே இருக்காங்கறதுக்கு என்ன அத்தாட்சின்னு நீ கேட்கணும். அவ ளைப் பேசச் சொல்லணும். ஏன்னு... ஷோபனு காணும்கிறதைத் தெரிஞ்சுக்கிட்ட எவனுச் சும் சும்மாகூட போன்ல விளையாடிப் பார்க்க லாம் இல்லையா? உன் பொண்ணு பேசி ஞன்னு... அப்புறம் அவன் சொல்ற எல் லாத்துக்கும் சரி, சரின்னு சொல்லு. பேச்சை வளர்த்து. புரியுதா?''

''ம்'' என்ருர் தண்டபாணி.

பாலு சிகரெட்டின் புகையைப் பக்க வாட்டில் திரும்பி வெளியேற்றிஞர். தண்ட பாணி வாஷ் பேஸினில் கை கழுவிக்கொண்டு வந்து அமர்ந்தார். ஸோபாவின் ஓரமாக உடலைச் சுருட்டிக் கொண்டு அந்தக் குட்டி நாய் உறங்கிக் கொண்டிருந்தது.

காத்திருந்தார்கள்.

| | | |
|---|---|---|
| மணி | 12.30 | — டெவி |
| மணி | 1.00 | — போன் |
| மணி | 1.30 | — ஒலிக் |
| மணி | 2.00 | — கவே |
| மணி | 2.3() | — யில்லே. |

● ● ●

**கா**லையில் ஏழு மணிக்கு விழிப்பு வந்த வுடன் விட்ட இடத்திலிருந்து கவலையைத் தொடர்ந்தார் தண்டபாணி.

ஒரு முழு ராத்திரி! எவனே ஒரு அன்னி யன் வசத்தில் திருமணமாகாத இளம் பெண் அதிலும் அழகான பெண்!

பணத்துக்காக மிரட்டுகிற ஒரு அயோக் கியனிடம் நேர்மை, ஒழுக்கம் இதெல்லாம் எப்படி எதிர்பார்ப்பது? அவன் என் மகளை ஏதாவது... கடவுளே, அப்படியெல்லாம் எதுவும் நடந்திருக்கக் கூடாது.

பாத்ருமிலிருந்து வெளியே வந்தார் பாலு. முகத்தை டர்க்கி டவலால் துடைத்துக் கொண்டே வந்து தண்டபாணியின் எதிரே அமர்ந்தார். தண்டபாணியின் மடியில் குதித்து உட்கார்ந்துகொண்ட நாய்க் குட் டியை அசுவாரஸ்யமாய்ப் பார்த்தார்.

ராமு டிரேயில் இரண்டு கப் காப்பி கொண்டு வந்து நீட்டிஞன்.

எடுத்துக்கொண்டு, ''எடுத்துக்க தண்ட பாணி'' என்ருர் பாலு.

''எனக்கு வேணும் ராமு.''

''என் மேலே கோபமா இருக்கேன்னு தெரியுது. ராமு, பேப்பர் வந்திருந்தா எடுத்துக்கிட்டுவா'' என்று கூறிவிட்டுக் கைகளை உரசிக்கொண்டார் பாலு.

தண்டபாணி எதுவும் பேசவில்லை.

தொடர்புகொண்டுதான் ஆகணும். ராத் திரி அவன் போன்பண்ணுததுக்கு நியாயமான காரணம் இருக்கு. அவன் பேசின போன் அவனுடைய வீட்ல இல்லாம இருக்கலாம். காலையிலே பண்ணணும்னு தீர்மானிச்சிருக்க லாம். சும்மா மனசைப் போட்டுக் குடைஞ் சுக்காதே. அவன் விரும்புற பணம் அவன் கைக்கு வர்ற வரைக்கும் ஷோபனு டபுள் பத்திரமா இருப்பா.''

''பாலு, அவ சின்னப் பொண்ணு இருந்தா இத்தனை கவலைப்பட மாட்டேன்.''

''புரியுது. எனக்கும் அந்தப் பயம் இருக்குது. ஆளு கவலைப்படறதனுலே இந்த நிலையிலே எதுவும் மாறிடப் போறதில்லை. நாம நல்லதையே நினைக்க ஆகணும்.''

டெலிபோன் ஒலித்தது இப்போது.

நாய்க் குட்டியைப் படக் என்று கீழே விட்டு விட்டு எழுந்தார் தண்டபாணி.

''இரு. கொஞ்சம் அடிக்கட்டும். நேத்துச் சொன்னதை நினைவிலே வச்சுக்கோ. பேச்சை வளர்த்து. என் மகளைப் பேசச் சொல்லுன்னு சொல்லு'' என்ருர் பாலு.

தண்டபாணி போனை எடுத்தார். விரல்கள் நடுங்கின.

''ஹலோ தண்டபாணி பேசறேன்.

''வீட்டு வாசல்ல தொங்கற லெட்டர் பாக்ஸைத் திறந்து பாருங்க'' என்ற குர லுக்குப் பின்னே இணைப்பு கட் ஆனது.

தண்டபாணி, ''ராங் நம்பர்'' என்று வைத்தார்.

''ச்சை'' என்ருர் பாலு.

லெட்டர் பாக்ஸில் இத்தனை பணம், இந்த இடத்தில் கொண்டு வந்து தந்து விட்டு உன் மகளை விடுவித்துக்கொள் என்று குறிப்பு எழுதிப் போட்டுவிட்டுப் போயிருக் கிறன் அவன். அப்படித்தான் இருக்கும்.

மானேஜர்:— நம்ம ஜூனியர் கிளார்க் மஹாலிங்கம் வீட்டுல என் னையா விசேஷம் — ஆபீஸ்ல எல்லா ருக்கும் இன்னிக்கு ஸ்வீட் கொடுத் தாரே?

குமாஸ்தா:— அவர் வீட்டுல ஒண்ணு மில்லீங்க. நம்ம ஆபீஸ்லதான் விசே ஷம் — கடைசியா அவருக்கு ஒரு இன்க்ரிமெண்டு கெடைச்ச இன்னி யோட 25 வருஷம் பூர்த்தியாயிடுச் சாம். அதனுலதான்...!

—அமுதன் மைந்தன்.



ஆடுவோம் பாடுவோம் கொண்டாடுவோம்

இதை இவனிடம் சொன்னால் குற்றவாளியைப் பிடிக்கிறேன் என்று என் மகளைப் பலிகொடுத்து விடுவான். இப்போது இந்தப் பாலுவை இங்கிருந்து முதலில் நகர்த்த வேண்டும்.

''நீ சொன்னது எல்லாம் ஞாபகம் இருக்கு பாலு. போன் வந்தா நான் அநுபடியே பேசறேன். உனக்குத் தெரியப்படுத்தறேன். நீ வீட்டுக்குப் போயிட்டு டூட்டிக்குப் போ.''

''நானும் அதைத்தான் சொல்ல வந்தேன்.

''நான் வீட்டுக்குப் போய்ட்டு, ஸ்டேஷன் போயிட்டு, பத்து, பத்தரைவாக்கிலே வர்றேன். அதுக்குள்ளே போன் பேசிட்டா வீட்டுக்கோ,ஸ்டேஷனுக்கோ போன்பண்ணு. தெம்பா இரு.''

பாலு புறப்பட்டுப் போனார்.

அவர் போனவுடனேயே சாவியை எடுத்துக் கொண்டு வாசலுக்கு விரைந்தார் தண்டபாணி.

காரைத் துடைத்துக்கொண்டிருந்த ராமு, ''என்னய்யா செய்யணும்?'' என்று வந்தான்.

''நீ உன் வேலையைப்பாரு.ஒண்ணுமில்லே''

காம்பவுண்டு சுவரில் பதிக்கப்பட்டிருந்த கடிதப் பெட்டியை அவசரமாகத் திறந்து உள்ளே பார்த்தார்.

ஒரு கேஸட் கிடந்தது. வேறு எதுவும் இல்லே.

அதை எடுத்துக் கொண்டு அவசர நடையில் உள்ளே வந்து, மாடிப் படிகளில் தாவி ஏறி, தம் அறைக்கு வந்தார். கூடவே வந்த நாய்க்குட்டியை ''சும்மாரு'' என்று அதட்டினார்.

போர்ட்டபிள் டேப் ரிக்கார்டரை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு படுக்கையில் அமர்ந்தார். 'ஏ' பக்கத்தில் ஒரு பென்சில் குறி இருக்கவே... அந்தப் பக்கத்தைப் போட்டுப் பதற்றத்துடன் ப்ளே பட்டனை அழுத்தினார்.

ஸ்ஸ் என்று சில விநாடிகள் மௌனம்.

பிறகு அவன் பேசினான்.

''தொழிலதிபர் தண்டபாணி அவர்களே வணக்கம். இப்பவும் உங்கள் மகள் ஷோபனா இங்கே சௌக்கியமாக இருக்கிறாள். அதைத் தெரிவிப்பதற்காகப் போன் செய்தால்உங்கள் போனில் யாரோ பாலு என்பவர் நான்தான் தண்டபாணி என்கிறார். அப்புறம் விசாரிச்சுப் பார்க்கையிலே பாலு என்கிற இன்ஸ்பெக்டர் உங்கள் நண்பர் என்பது தெரிய வருகிறது. அப்படி இருக்க மறுபடி போனில் பேச எனக்கென்ன மன நோயா?

சரி, போகட்டும். பிரச்னைக்கு வரலாம். உங்கள் மகள் ஷோபனா-நிச்சயமாய் உங்களுக்குத் தேவைப்படுவாள் என்றே நினைக்கிறேன். ஏழெட்டு இருந்தாலாவது சரி, ஒன்று தொலையட்டும் என்று விட்டு விடலாம். ஒரே மகளாயிற்றே. சொத்து முழுவதுக்கும் வாரிசாயிற்றே. ஆகவே உங்களுக்கு உங்கள் மகள் வேண்டும். எனக்கு? வாடகை மட்டும்தான் வேண்டும். உங்கள் மகள் என் பொறுப்பில் தங்கியிருப்பதற்கான வாடகை.

அதிகமில்லே. நிறையக் கேட்பதற்கு நான் பேராசைக்காரனுமில்லே. ஒரே ஒரு லகரம் வேண்டும். நூறு நூறு தாள்களாக, வரிசையான எண்கள் இல்லாமல்.

எங்கே, எப்படி என்னிடம் சேர்ப்பிக்கப்பட வேண்டும் என்பதற்கு முன்னால் உங்கள் சந்தேகம் ஒன்றினைத் தீர்க்க வேண்டியது என் கடமை. உண்மையிலேயே ஷோபனா என் வசம் இருக்கிறாள் என்பதற்கு என்ன அத்தாட்சி? நியாயமான சந்தேகம். கொஞ்சம் நான் விலகிக் கொள்கிறேன். உங்கள் அருமை மகள் ஷோபனா இப்போது பேசுவார்.''

சில விநாடிகள் மௌனம்.

''ம்.... பேசுடி... சொல்லு.... உங்கப்பா கிட்டே பணத்தை ரெடி பண்ணச் சொல்லு'' என்ற அவன் முரட்டுக் குரலைத் தொடர்ந்து ஷோபனா அழுகையில் ஆரம்பித்தாள்.

''என்னை மன்னிச்சுடுங்க டாடி. என்னால உங்களுக்குக் கஷ்டம். உங்கப்பாவுக்கு ஆக்ஸிடெண்ட்னு சொன்னப்போ நம்பிப் புறப்பட்டது என் தப்புத்தான் டாடி. என்னைக் கொன்னுடுவேன்னு பயமுறுத்தறான் டாடி. எனக்கு என்ன செய்யறதுன்னே புரியலே.''

படக் என்று ஷோபனாவின் குரல் இடைமறிக்கப்பட்டது. ''இராமாயணம் படிச்சது போதும். போய் அப்படி உட்காரும்மா.''

மறுபடி அவன் பேச ஆரம்பித்தான்.

பயனில்லாமல் தன்போக்கில் மனம் செல்வதைத் தடுத்து நிறுத்த வேண்டும். இடீரென்று ஒருவர் ''நீ இப்போது என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டால், உடனே தயங்காமல் ''இதை நினைத்தேன். இது என் மனத்திலுள்ள எண்ணம்'', என்று உண்மையாக சொல்லக் கூடிய வாறு மனத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

—மார்க்ஸ்.

தகவல்:— இசை. முத்து.



''என்ன சார், நான் மேலே தொடரட்டுமா? கொன்னுடுவேன்னு பயமுறுத்தினது உண்மைதான். ஆனால் அதைச் செய்ய மாட்டேன். அதற்கு முன்னால் இந்த அழகுப் பதுமையிடம் வேறு ஒரு நல்ல காரியம் கூட இருக்கிறது. நான் கேட்டபடி, சொல்லப் போவது போல் பணம் என் கைக்கு வந்து விட்டால் உங்கள் மகள் மேல் என் நிழல் கூடப் படாது.

போலீசுக்கு உதவி நாடி கோரிக்கை அனுப்பவேண்டாம். அது புத்திசாலித்தனம் இல்லே. பிறகு உங்கள் இஷ்டம்.

சரியாய்க் காலே பத்து மணிக்கு நீங்கள் புறப்படுகிறீர்கள். உங்களுடைய வெள்ளை ஃபியட் INO 4476ஐ எடுத்துக்கொள்கிறீர்கள். நூறு ரூபாய் நோட்டுக்களாகப் பத்துக் கட்டுகளை ஒரு பார்சலாகக் கட்டிக் கொண்டு அதை காரின் டிக்கியில் வைக்கிறீர்கள். டிக்கியைப் பூட்டுவதில்லே. ஓக்கே?

இப்போது காரை எடுத்துக்கொண்டு எக்மோர் வந்து ஹோட்டல் இம்பீரியல் வாசலில் நிறுத்துகிறீர்கள். திரும்பிப் பார்க்காமல் உள்ளே நடந்து ஓமர்கய்யாம் ரெஸ்டாரண்ட் அருகே இருக்கும் ஸ்டாலில் உங்கள் பிராண்ட் சிகரெட் வாங்கிக்கொள்கிறீர்கள். திரும்ப காருக்கு நடந்து வந்து ஸ்டார்ட் செய்கிறீர்கள். உங்கள் முதுகுக்குப் பின் போலீஸ் இருக்கிறதா, இல்லையா என்பதை நான் அறிந்து கொள்வதற்காக இந்த பிரேக்.

இப்போது நீங்கள் காரை எங்கேயும் நிறுத்தாமல் கே. கே. நகர் டெர்மினஸ் வருகிறீர்கள். போஸ்ட் ஆபீசுக்கு எதிர்ப்புறமாக வண்டியை நிறுத்திவிட்டு காரின் கண்ணாடிகளை யெல்லாம் ஏற்றிப் பூட்டிக் கொண்டு எல். ஐ. ஜி. பிளாட்ஸ் நோக்கி நிதானமாக நடக்கிறீர்கள். மூன்று சிகரெட் குடிக்கிற நேரம்வரை நடந்துவிட்டு திரும்புகிறீர்கள். இப்போது உங்கள் வீட்டில் உங்கள் மகள் ஷோபனா உங்களுக்காகக் காத்திருப்பாள். போய் வாருங்கள்.

போலீஸ் தலையீடு இருந்தாலோ, நீங்களே வேறு குறுக்கு வழி வேலைகள் செய்ய முயன்றாலோ, ஷோபனா உங்களுக்கு ஷோ-ப-னா என்றுதான் கிடைப்பாள். பதினொரு மணி வாக்கில் கே. கே. நகரில் காத்திருக்கிறேன். நீங்கள் புறப்பட வேண்டிய நேரம் பத்து மணி.

இத்துடன் வர்த்தக விளம்பர நிகழ்ச்சி முடிவடைகிறது.''

டேப் வெறுமனே சுழன்று கொண்டிருந்தது.

டேப்பை ஆப் செய்துவிட்டு அவசரமாக நேரம் பார்த்தார் தண்டபாணி.

எட்டை நெருங்கிக் கொண்டிருந்தது.

இன்னும் இரண்டு மணி நேரம்தான் இருக்கிறது. அதற்குள் பணம் ரெடி செய்தாக வேண்டும்.

அறையின் கதவைச் சாத்திக் கொண்டு ஸேப் லாக்கரைத் திறந்தார்.

நூறு ரூபாய் நோட்டுக் கட்டுகளும், ஐம்பது ரூபாய் நோட்டுக் கட்டுகளும் நிறைய அடுக்கப்பட்டிருந்தன. ஆனால் பெரும்பாலும் இன்னும் கைரேகை படாத, அச்சு மணம் மாறாத புதுக் கட்டுக்கள்.

வரிசையாய் எண் உள்ளவை கூடாது என்று சொல்லியிருக்கிறானே!

பழைய கட்டுக்களாகப் பொறுக்கினார். ஆறு கட்டுகள் தேறின. இன்னும் நாற்பதினாயிரம் ரூபாய் தேவை. பழைய தாள்களாக.

அது ஒன்றும் பிரச்னை இல்லே. ஒரு போன் செய்தால் எத்தனை லட்சம் வேண்டுமானாலும் ஏன் என்று கேட்காமல் தாங்களே நேரில் கொண்டு வந்து கொடுக்கின்ற நண்பர்கள் நிறைய இருக்கிறார்கள்.

பாராட்டுவிழாவில்:—

''ஆரம்பத்தில் சிறுகதை எழுத்தாளராகத் தொடங்கி இன்றைக்கு நாவல் மன்னனாகத் திகழும் நமது விழா நாயகர், விரைவில் மிகச் சிறந்த ஆபாச எழுத்துச் சக்கரவர்த்தியாக கொடி கட்டிப் பறக்க வேண்டும் என வாழ்த்துகிறேன்...''

—சுதர்ஸன்.



துர்வாசர் கவனிக்க!

கோபால்சாமியைப் பார்த்து வாங்கிக் கொள்ளலாம் என்று முடிவு செய்தார் தண்டபாணி.

பணம் வாங்கிக் கொண்டு திரும்பி வருகையில் பாலு வந்து விட்டால்? உடனே நீ பணம் கொடுக்கக் கூடாது என்பான். அவனை வளைத்துப் பிடிக்கிறேன். பார் என் திறமையை என்பான். ரிஸ்க்! இவன் திறமையைச் சோதித்துப் பார்க்க நான் தயாரில்லே. எனக்கு இருப்பது ஒரே மகள்.

கோபால்சாமியிடம் பணம் வாங்கிக்-கொண்டு திரும்ப வீட்டுக்கு வராமல் நேராய் அவன் சொன்னபடி ஹோட்டல் இம்பீரியல் போய்... அவன் கூறியிருப்பவை படிச் செய்ய வேண்டியதுதான்.

தண்டபாணி பணத்தை ஒரு ஹேண்ட் பாகில் போட்டு வைத்துவிட்டு அவசரமாகக் குளித்தார். உடை மாற்றிக் கொண்டார். புறப்பட்டார்.

கீழே இறங்கி வந்து, ''ராமு, பாலு வருவான். இல்லை போன் செய்வான். ஒரு சொந்தக்காரங்க வீட்ல ஷோபனா இருக்கிறாளாம். அவளை அழைச்சுக்கிட்டு வர்றதுக்காக ஐயா போயிருக்காருன்னு சொல்லு''

வெளியில் வந்தார்.

காரின் கதவை டிரைவர் திறந்துவிட்டான்.

''செல்லமுத்து, வண்டியை நானே ஓட்டிக்கிட்டுப் போறேன். நீ வீட்டுக்குப் போய்ட்டு மத்தியானத்துக்கு மேலே வா.''

கூடவே வந்து காருக்குள் தாவிய நாய்க் குட்டியை, ''நோ டார்லிங்'' என்று தூக்கி டிரைவரிடம் கொடுத்தார். ''உன்னே கொண்டு போ.''

காரை ஸ்டார்ட்செய்து காம்பௌண்டை விட்டு வெளியேறிச் சாலையில் இறங்கினதுமே வேகம் கொடுத்தார்.

• • •

**த**ண்டபாணி வீட்டிலிருந்து தம் பைக்கில் புறப்பட்ட பாலு தம் வீட்டுக்கு வருவதற்கு முன் வழியில் நின்று இரண்டு மூன்று பத்திரிகைகள் வாங்கிக் கொண்டார். அப்புறம் இரண்டு சிக்னல் சிக்கல்களில் மாட்டிக் கொண்டு காத்திருந்தார்.

வீட்டிற்கு வந்ததும் மனைவி செய்தி வைத்திருந்தாள். ''ஏ.எஸ்.ஐ. கூப்பிட்டார். வந்த உடனேயே கூப்பிடச் சொன்னார். ரொம்ப அர்ஜண்ட்னு சொன்னார்.''

''போலீஸ்காரனுக்கு நிதானமான செய்தி வர்றதில்லே. எப்பவும் அர்ஜண்ட்தான்'' என்று சிரித்துக் கொண்டே, ''பசங்க ஸ்கூல் போயாச்சா?'' என்று கேட்டுவிட்டு டெலிபோனை எடுத்துத் தேனாம்பேட்டை ஸ்டேஷனைத் தொடர்பு கொண்டார்.

''ஹலோ பாலு பேசறேன்.''

''குட் மார்னிங் ஸார். ராமரத்னம் பேசறேன். உங்களுக்கு ஒரு அவசரமான மெஸேஜ் வந்திச்சி. சென்ட்ரல் ஈஸ்ட் டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலேர்ந்து மிஸ்டர் பரமசிவம் இருபது நிமிஷம் முன்னாடி போன் செய்தார். நான் உங்களுக்குக் கனெக்ட் பண்றதுக்காக முயற்சி செய்தேன். நீங்க இல்லே.''

''கட் த ஹிஸ்டரி. விஷயத்தைச் சொல்லுங்க சீக்கிரம்.''

''நீங்க கொடுத்த நம்பருக்கு இருபத்தஞ்சு நிமிஷம் முன்னாடி ஒரு லோக்கல் கால் வந்திருக்கு. ஒரே ஒரு வரி கான்வர்சேஷன் நடந்திருக்கு. அதனால எந்த நம்பர்லேர்ந்து வந்த கால்னு டிரேஸ் அவுட் பண்ண முடியலே.''

''என்ன சொன்னான் அந்த வரியிலே?''

''வெயிட். அவர் சொன்னதை அப்படியே எழுதி வச்சிருக்கேன். 'வீட்டு வாசல்ல தொங்கற லெட்டர் பாக்ஸைத் திறந்து பாருங்க' அவ்வளவுதான். அதுக்கு பிறகு 'ராங்நம்பர்', கால் டிஸ்கனெக்ட்ஆயிடுத்து.''

''மை காட். தாங்க் யூ தாங்க்யூ வெரி மச்'' என்று போனை வைத்தார் பாலு. முகம் சிவந்தது. காதோரம் சூடாயிற்று.

ப்ளடி தண்டபாணி! நான் அங்கே இருந்த போது வந்த காலை ராங் நம்பர் என்று பொய் சொல்லித் – தனியாக மகளை மீட்க இறங்கி விட்டாயா?

நோ..நான் அத்தனை மடையன் இல்லை என்பது உனக்குத் தெரிய வேண்டும். போலீஸின் சக்தியை நீ உணர வேண்டும்.

உனக்குத் தேவை உன் மகள்.

எனக்குத் தேவை குற்றவாளி.

''டிபன் சாப்பிட வர்றீங்களா?'' என்று வந்த மனைவியிடம், ''ஸாரி டியர். நேரமில்லே இப்போ'' என்றுவிட்டு ரிசீவரை எடுத்தார்.

''ஹலோ யார் பேசறது?''

''வீட்ல வேலை பார்க்கிற ராமு பேசறேன். நீங்க யாருங்கய்யா?''

''ராமு, நான்தான் பாலு பேசறேன். தண்டபாணியைப் பேசச் சொல்லு.''

''அய்யா இல்லீங்களே...''

''இல்லேயா? எங்கே?''

''சின்ன வண்டியை எடுத்துக்கிட்டு இப்பத்தான் வெளியே புறப்பட்டுப் போனாரு. நீங்க போன் பண்ணா சொல்லச் சொன்னாரு.

இன்றைய எழுத்தாளர்களில் எவரும் ஆங்கிலம் கலக்காமல் எழுதுவது கிடையாது. ஏன் இந்த நிலை? தாங்கள் ஆங்கிலம் படித்தவர்கள் என்று காட்டிக் கொள்ளவா? தப்புத்தப்பாக எழுதி தங்கள் ஆங்கில ஞானத்தைப் பறை சாற்றிக் கொள்ளவா? ஆங்கிலக் கலப்பில்லாத தமிழ் இலக்கியம் பயனற்றது என்று நினைக்கிறீர்களா? ஒன்றும் புரியவில்லை. ''ஓ, பிளீஸ் லீவ் மி அலோன்'' என்று ஒரு எழுத்தாளர் தம் கதையில் குறிப்பிடுகிறார். இதற்குத் தமிழ் அவருக்குக் கிடைக்கவில்லையா? இன்றைய எழுத்தாளர்களைக் கேட்டுக் கொள்கிறேன். சர்க்கரைப் பொங்கலில் இஞ்சித் துண்டைக் கலந்து சுவையைக் கெடுக்க வேண்டாம்.

—சரவன்.



**சர்க்கரைப்பொங்கலில் இஞ்சி**

ஷோபனு அம்மா அவங்க சொந்தக்காரங்க வீட்ல இருக்காங்களாம். அவங்களே அழைச்சுக்கிட்டு வர்றதுக்காகப் போறதாச் சொல்லச் சொன்னரு.''

''ஷிட்!''

''என்னங்கய்யா?''

''ஒண்ணுமில்லே. வச்சிடு. நேர்ல வர்றேன்.''

பாலு உடனே கழற்றி வைத்த கடிகாரத்தைக் கட்டிக்கொண்டு வாசலுக்குப் பாய்ந்து பைக்கை ஸ்டார்ட் செய்தார்.

லெட்டர் பாக்ஸில் அவன் செய்தி வைத்திருக்கிறன். அதன்படி செயல்பட இவன் புறப்பட்டுப் போயிருக்கிறன். அவன் கடிதம் மூலமா ரேன்சம் நோட் எழுதியிருந்தால்—எத்தனை விஷயங்கள் இருக்கின்றன அதில்.

கையெழுத்து – அதன் மூலம் மனநிலை. கைரேகை. பாஷை எழுதும் விதம். உபயோகப்படுத்தின சொற்கள் காட்டிக்கொடுக்கும் அவன் எந்தப் பகுதியைச் சேர்ந்தவன் என்று. உபயோகப்படுத்தின காகிதம் கூட ஒரு லீடாக அமையலாம்.

இத்தனை இருக்கையில் என் கவனத்துக்குக் கொண்டு வராமல் இவன் மடத்தனமாக அவனின் ஆணைகளுக்குக் கட்டுப்பட்டு..

நோ. நோ மோர் கிட்நாப்பிங். அவனை விடுவதில்லை நான்.

**த**ண்டபாணியின் வீட்டுக்குள் நுழைந்ததும் ராமுவை அழைத்தார் பாலு.

''என்னங்கய்யா?''

''இத பாரு, வாசல்ல இருக்கிற லெட்டர் பாக்ஸைத் தண்டபாணி திறந்தாரு, நான் போனதுக்கப்புறம்?''

''ஆமாம் சார்.''

''தொறந்து என்ன எடுத்தான்?''

''அதை நான் பாக்கலே. என்னமோ எடுத்துக்கிட்டு கிடுகிடுன்னு மாடிக்கு அவர் ரூமுக்குப் போய்க் கதவைச் சாத்திக்கிட்டார்.''

பாலு மாடிப் படிகளில் வேகமாக ஏறினர்.

தண்டபாணியின் அறைக்குள்ளே வந்து, மேஜையை நெருங்கி அவசரம் அவசரமாக ஆராய்ந்தார். அடுக்கப்பட்டிருந்த புத்தகங்களைப் பிரித்துப் பார்த்தார். அவர் எதிர்பார்த்த மாதிரி கடிதம் எதுவும் இல்லே. டிராயர்களை இழுத்துப் பார்த்துவிட்டுத் திரும்பியபோது படுக்கையின் மீது கிடந்த டேப் ரிக்கார்டர் பட்டது.

நேற்றைக்கு இந்த டேப் ரிக்கார்டர் இங்கே இல்லையே. ஷெல்ஃபில் அல்லவா இருந்தது. இப்போது படுக்கையில் கிடக்கிறது என்றால்....?

டேப் ரிக்கார்டரை எடுத்தார். ஆன் செய்தார்.

ஸ்ஸ் என்று மௌனம்.

ஆஃப் செய்துவிட்டு, ரிவர்ஸ் செய்துவிட்டு ஆன் செய்தார்.

'குறுக்கு வழி வேலைகள் செய்ய முயன்றுலோ, ஷோபனு உங்களுக்கு ஷோ-ப-ன என்றுதான் கிடைப்பாள். பதினேரு மணி வாக்கில் கே. கே. நகரில் காத்திருக்கிறேன். நீங்கள் புறப்பட வேண்டிய நேரம் பத்து மணி. இத்துடன் வர்த்தக விளம்பர நிகழ்ச்சி முடிவடைகிறது....ஸ்ஸ்ஸ்.... ஸ்ஸ்ஸ்...'

படுக்கையில் உட்கார்ந்து முழுவதையும் ரிவர்ஸ் செய்து, ஆரம்பத்திலிருந்து பொறுமையாகக் கேட்டார் பாலு.

மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்தார்.

8.45.

நிறைய நேரம் இருக்கிறது. சிந்திக்க அவகாசம் இருக்கிறது.

சிந்தித்தார். என்ன செய்யலாம்?

இந்த பிளாக் மெயிலில் ஈடுபட்டிருக்கும் இவன் கொஞ்சம் அசாதாரணமானவன். கொஞ்சம் விளைவுகளை யூகம் செய்து திட்டமிடுபவன். புத்திசாலி. போனில் முதலில் நான் பேசியவுடன் வைத்துவிட்டு விசாரித்து நான் யார் என்று தெரிந்து கொண்ட பின்னரும் அவனுக்கு உதறல் இல்லே. போலீஸ் நபர் கலையிட்டிருக்கிறன் என்ற பின்னும் பயம் இல்லே. புத்திசாலித்தனமாக போனில் சொற்பமாகப் பேசி... புத்திசாலித்தனமாக டேப்பால் பேசி பாக்ஸில் போட்டிருக்கிறன். இம்பீரியல் ஹோட்டல் வாசலில் போலீஸ் மப்டியில் நிற்க வைக்கலாம். ஆனல் வேண்டாம். அவனுக்குக் கொஞ்சமும் சந்தேகம் வேண்டாம். கே. கே. நகர் போஸ்ட் ஆஃபீஸ் அருகே கார் அனாதையாக இருக்கையில்.,.

தற்போது சினிமாக்களுக்கு யு (எல்லாரும் பார்க்கலாம்.) ஏ (வயது வந்தவர்களுக்கு மட்டும்) இரண்டு சர்டிபிகேட்டுகள் மட்டுமே வழங்கப்படுகின்றன. இனிமேல், மேலும் இரண்டு சர்டிபிகேட்டுகளை சென்சார் போர்டு வழங்கவிருக்கிறது. அவை UA: எல்லோரும் பார்க்கலாம். ஆனல் 12 வயதுக்குட்பட்டவர்கள் பெற்றோருடன் தான் வரவேண்டும்.

S: இப்படங்களைச் சில குறிப்பிட்ட தொழில் செய்வோர் மட்டுமே பார்க்கலாம்.

தகவல்:— ஜூனி.



சென்ஸார்

வரப்போகிறவன் — டிரைவர் உடையில். சொந்த வண்டி போல டிக்கியைத் திறந்து பணப் பார்சலை எடுத்துக் கொள்ளப் போகிறான்.

இதுதான் அவன் திட்டம்.

பெயர் தெரியாத குற்றவாளியே, உன் திட்டப்படி எல்லாம் நடக்கப் போகிறது. ஆனால் பணப் பார்சலோடு நீ போய்ச் சேரப் போவது உன் வீட்டுக்கு அல்ல!

கம்பிகளுக்குப் பின்னால் உன்னை வைத்து உன் உதடுகளிலிருந்து உண்மை கறக்கும் வித்தை என்னிடம் இருக்கிறது.

பாலு எழுந்து போய் போன் அருகில் அமர்ந்தார்.

''ஹலோ நான்தான் பாலு பேசறேன். ராமரத்னமா? அருணகிரி இன்னும் வரலே? சரி, பரவாயில்லே. மூணு கான்ஸ்டபிள் களை மஃப்டியிலே கே. கே. நகருக்குஅனுப்பி வையுங்க. ஜீப் எல்லாம் வேணாம். கே.கே. நகர் போஸ்ட் ஆபீஸ் உள்ளே எனக்காக வெயிட் பண்ணச் சொல்லுங்க. ஸாரி, டயம் சொல்ல மறந்துட்டேன். அவங்களை இப்பவே அனுப்ப வேண்டாம். சரியாகப் பத்து மணிக்கு அங்கே இருக்கிறமாதிரி அனுப்பினாப் போதும்.''

போனை வைத்துவிட்டு எழுந்தார்.

பைக்கை எடுத்துக் கொண்டு நேராய் வீட்டிற்கு வந்து காக்கி உடைகளைக் கழற்றி ஸ்டாண்டில் மாட்டிவிட்டு வேஷ்டி கட்டிக் கொண்டு மேலே ஜிப்பா ஒன்றைப் போட்டுக் கொண்டார். ரிவால்வரை பெல்ட் உறையிலிருந்து நீக்கி இடுப்பில் செருகிக் கொண்டார். கூலிங் கிளாஸ் ஒன்று எடுத்து அணிந்து கண்ணாடிக்கு முன் நின்று பார்த்துக்கொண்டார்.

என்னை இதற்கு முன் பார்த்திருப்பவர்கள் தவிர வேறு எவனும் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் என்று கற்பனை கூடப் பண்ண மாட்டான்.

டிஃபன் சாப்பிட்டுவிட்டு செருப்பணிகையில் மணி ஒன்பதரை.

பைக்கை உபயோகிக்காமல் டாக்ஸியை அழைத்து ஏறிக் கொண்டார்.

மனிதர்கள் காய்த்துத் தொங்க... பஸ்கள் ஒரு பக்கமாய்ச் சாய்ந்து கொண்டு சென்றன. செயற்கை மழை முயற்சிக்காக ஒரு மேகத்தைக்கூட விட்டு வைக்காமல் எழுதாத காகிதமாய் சுத்தமாய் இருந்தது வானம். வெள்ளையடிக்கவே தேவையில்லாமல் சாலையோரங்களில் நிற்கும் சுவர்கள் முழுக்க... ஜெயலலிதா பேசுவார் — வருகிறது முந்தானை முடிச்சு — சிறப்பான ட்யூஷனுக்கு XYZ டுடோரியல்ஸ் — பாரதப் பிரதமரே, வருக, வருக!

கே.கே. நகர் போஸ்ட் ஆபீசிற்குள் பாலு நுழைந்தபோது மணி பத்தாக இரண்டு நிமிடம். காத்திருந்த மஃப்டி காவல்காரர்கள் அவரை நெருங்கி வந்தார்கள்.

''மணி நீங்க அஷோக் பில்லர் இருக்கு பாருங்க அந்த இடத்துக்குப் பக்கத்திலே ஏதாச்சும் டீக்கடையிலே இருங்க. டி.என். ஓ. 4476ங்கிற வெள்ளை பியட் வண்டி வந்தாலோ — போனாலோ உடனே அதை அப்சர்வ் பண்ணணும். பக்கத்திலே ஒரு டாக்சிக்காரர் கிட்டப் பேசி ரெடியா வச்சிக்கங்க. நான் ஓடி வந்தா டாக்ஸி உடனே புறப்படற மாதிரி இருக்கணும். புரியுதா? இன்னும் அரை இல்லே முக்கால் மணி நேரம் கழிச்சுத்தான் வண்டி வரும்னு எதிர்பார்க்கிறேன். போங்க'' என்று ஒருவரை அனுப்பினார்.

மற்ற இருவரையும் பார்த்தார்.

''நீங்க ரெண்டு பேரும் இந்த போஸ்ட் ஆபீஸ் வாசல்ல கையில பேப்பரை விரிச்சு வச்சிக்கிட்டு சும்மா பேசிக்கிட்டு இருங்க. எதிர்க்கத்தான் அந்த வண்டி வந்து நிக்கப் போகுது. அது வந்து நின்னு, ஓட்டிக்கிட்டு வர்றவர் இறங்கி காரைப் பூட்டிக்கிட்டு நடந்து போனதும் காரோட டிக்கியைத் திறந்து அங்கே இருக்கிற பார்சலை எடுப்பான் ஒருத்தன். அவன் நமக்கு முழுசா வேணும். அவன் எதிலே வரப்போறான், எங்கேர்ந்து வரப்போறான் எதுவும் தெரியாது. நாம அலர்ட்டா இருக்கணும். அவனைப் பிடிச்சே ஆகணும்.'' என்று மெல்லிய குரலில் கூறிவிட்டு நகர்ந்தார் பாலு.

அவர்கள் இருவரும் வெளியே வந்து சாலைக்கு அருகே சிமெண்ட் பிளாட்பாரம்

---

நேற்று இரவு (17.7.83) ரேடியோவில் இங்கிலாந்துக்கும் நியூசிலாண்டுக்கும் இடையில் நடைபெறும் கிரிக்கெட் டெஸ்ட் போட்டி நேர்முக வர்ணனை கேட்டுக்கொண்டிருந்தேன். தொடக்க ஆட்டக்காரர் இங்கிலாந்து கிரிஸ் டவாரே ஒரு ஸ்குவேர் டிரைவ் செய்து நான்கு ஓட்டங்களை எடுத்தார். வர்ணனையாளர் ''உலகக் கோப்பை: போட்டியில் ஸ்ரீகாந்த் செய்த ஸ்குவேர் டிரைவ் போல் இருந்தது. ஸ்ரீகாந்தைப்போல் யாருமே ஸ்குவேர் டிரைவ் செய்ய முடியாது. இப்போது டவாரே செய்தது ஓர் அளவுக்கு ஸ்ரீகாந்த் செய்ததைப் போல் இருந்தது'' என்றார்.

-என். ராமகிருஷ்ணா



ஸ்ரீகாந்த் செய்தது

பக்கத்தில் அமர்ந்து கொண்டு பேசிக் கொண்டு காத்திருந்தார்கள்.

பாலு ஒரு சிகரெட்டை எடுத்துப் புகைத்துக்கொண்டு சாலையில் சற்றுத்தூரம் நடந்தார். இலைகளை உதிர்த்து விட்டு எலும்புக் கூடாய் நின்ற ஒரு மரத்தின் அடியில் நின்று கொண்டார். இங்கிருந்து குற்றம் நடக்கப் போகிற ஸ்பாட்டைத் தெளிவாகப்பார்க்க முடிந்தது. காத்திருந்தார். பேனாக் கத்தியை விரித்து மரத்தின் அடியில் கீற ஆரம்பித்தார்.

பத்தே முக்காலுக்கு வந்தது வெள்ளை ஃபியட்.

போஸ்ட் ஆபீஸின் எதிர்ப்பக்கம் சப்தமில்லாமல் நின்றது.

தண்டபாணி கீழே இறங்கினார். கதவின் கண்ணாடியை ஏற்றி விட்டார். கதவைப் பூட்டினார். ஒரு பெருமூச்சை வெளியேற்றி விட்டு சிகரெட் ஒன்றை எடுத்து உதட்டில் வைத்துக் கொளுத்திக் கொண்டார். எல். ஐ. ஸி. பிளாட்ஸ் நோக்கி நிதானமாக நடக்கத் தொடங்கினார்.

பாலுவும் ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டு மரத்தை விட்டு விலகினார். கார் நிற்கிற பக்கத்துக்கு எதிர்ப் பக்கத்தில் நிதானமாக போஸ்ட் ஆபீஸை நோக்கி நடந்தார். மிக மிக அவசரமில்லாமல்.

ஐந்து நிமிடங்கள்.

இதோ...இதோ வரப் போகிறான்.

பாலு போஸ்ட் ஆபீஸை நெருங்கினார். இரண்டு கான்ஸ்டேபிள்களும் பேப்பர் கையில் வைத்துக் கொண்டு இமைகளை உயர்த்திக் காரைப் பார்த்துக் கொண்டார்கள்.

பாலு சற்றுத் தள்ளி நடந்து போய் ஒரு டீக்கடையில் நின்றுகொண்டு டீ ஆர்டர் செய்தார். இரண்டாவது சிகரெட் குள்ளமாகிக் கொண்டிருந்தது.

பத்து நிமிடங்கள்.

இந்த வினாடியில் அவன் வரப்போகிறான்.

குடித்து முடித்த டீக் கிளாஸைத் திருப்பிக் கொடுத்தார். முகத்தில் லேசாய் ஒரு குழப்ப ரேகை ஓடியது.

ஏன் இன்னும் ஆளைக் காணோம்? காரை யாருமே அண்டவில்லையே...

இருபது நிமிடங்களுக்குப் பின்...

தூரத்தில் தண்டபாணி காரை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தார். மை காட்! இவர் திரும்பிக் கூட வந்து விட்டார். இன்னும் பார்சலை எடுக்க யாரும் வரவில்லையே... ஒருவேளை... போலீஸ் இங்கே காத்துக் கொண்டிருப்பதை அறிந்து கொண்டு விட்டானோ? நோ. நிச்சயமாக அதற்கு வாய்ப்பில்லை. பின்னே ஏன்?

தண்டபாணி தம் காரை நெருங்கிவிட்டார்.

கதவைத் திறந்தவர் கொஞ்சம் நிதானித்தார். சாலையை ஒரு தரம் பார்த்துக் கொண்டு காரின் பின்புறம் வந்தார்.

டிக்கியைத் திறந்து உயர்த்திப் பார்ப்பது இங்கிருந்து தெரிந்தது. பின் மறுபடி டிக்கியை மூடினார். காருக்குள் டிரைவர் சீட்டில் அமர்ந்து கொண்டு ஸ்டார்ட் செய்ததும் பாலு மேலும் குழப்பமுற்றார்.

டிக்கிக்குள் பார்சல் அப்படியே இருப்பதைப் பார்த்தவுடன் நியாயமாக அவர் என்ன செய்ய வேண்டும்? அவன் இன்னும் ஏன் எடுத்துச் செல்லவில்லை என்று கவலைப் பட்டிருக்க வேண்டும். இன்னும் கொஞ்ச நேரம் கழித்து வந்து பார்க்கலாம் என்று எந்தப் பக்கமாவது நடந்திருக்க வேண்டும்.

அதை விடுத்து... சகஜமாய்க் காரைக் கிளப்புகிறாரே...

பாலு வேகமாக நடந்து டாக்ஸியை ஏற்பாடு செய்து வைத்துக் கொண்டு காத்திருந்த கான்ஸ்டபிளை அடைந்தார்.

''எங்கே டாக்ஸி?''

ஓட்டலில்:— ''என்னப்பா — பேப்பர் தோசை ஒண்ணு கொண்டுவர்றியா?''
சர்வர்:— ''இங்கிலீஷா — தமிழா?''
—அமுதன் மைந்தன்



முழு விவரம் தேவை!

''இதோ.''

''நான் இதிலே போறேன். நீங்க மூணு பேரும் ஸ்டேஷனுக்குப் போயிடுங்க. தேவைப்பட்டாக் கூப்பிடறேன்'' என்றுவிட்டு தயாராய் இருந்த டாக்ஸியில் ஏறிக்கொண்டார்.

''அதோ போகுதே வெள்ளை பியட். அது பின்னாடியேபோப்பா'' என்று கூறிவிட்டு யோசிக்க ஆரம்பித்தார்.

தண்டபாணியின் இந்த நடவடிக்கைக்குக் காரணம் என்ன? டேப்பில் சொன்னதைத் தவிர வேறு விசேஷமான குறிப்பு எதுவும் அவன் சொன்னானா? வாய்ப்பில்லை.

முன்னால் போன கார் தண்டபாணியின் பங்களா நோக்கி அதற்கான பாதைகளில் திரும்பிக் கொண்டிருந்தது. டாக்ஸி காப்பியடித்தது.

அரை மணிக்குப் பிறகு....

தண்டபாணியின் பங்களாவின் வாசலிலேயே டாக்ஸியை அனுப்பினார் பாலு. உள்ளே போர்ட்டிகோவில் வெள்ளை பியட் இளைப்பாறிக் கொண்டிருந்தது.

பாலு சகஜமாய் உள்ளே நுழைந்தார்.

உள்ளே ஹாலில் சோபாவில் புதைந்து கொண்டு தண்ணீர் குடித்துக் கொண்டிருந்த தண்டபாணி இவரைப் பார்த்ததும் சிரித்தார்.

''வா, பாலு, உக்காரு.''

''எங்கே ஷோபனா, சொந்தக்காரங்க வீட்லேர்ந்து அழைச்சிட்டு வந்துட்டியா?''

''வர்ற வழியிலே ஒரு பிரண்டு வீட்ல இறக்கிவிட்டா. கொஞ்ச நேரத்திலே வந்துடுவா. உக்காரு பாலு.''

அமைதியாய் உட்கார்ந்தார் பாலு.

''தண்டபாணி, இதே பொய்யை என் நண்பனா இல்லாம வேற யாராச்சும் சொல்லி இருந்தா பாதிப் பல்லு வாயிலேர்ந்து வெக்கேட் பண்ணி யிருக்கும். சொல்லு, டேப்பிலே உள்ள இன்ஸ்ட்ரக்ஷன் தவிர வேறே உனக்கு உண்டா?''

''வந்து... பாலு.... உனக்கு....?''

''எல்லாம் போட்டுக் கேட்டாச்சு. இவ்வளவு நேரம் கே. கே. நகர்லதான் காத்துக்கிட்டிருந்தேன் இந்த டிரஸ்ஸிலே. பணப் பார்சலை அவன் எடுக்க வரவே இல்லே என்?''

''எடுக்க வரலையா? அப்போ டிக்கியைத் திறந்து காக்கா, குருவி எதாச்சும் தூக்கிக்கிட்டுப் போச்சா?''

''என்ன சொல்றே?''

''என்ன சொல்றது? இட்டப்படியே அவன் செயல்பட்டிருக்கான். அவன் சொன்னபடியே நானும் நடந்துக்கிட்டேன். மூணு சிகரெட் குடிக்கிற நேரம் நடந்துட்டுத் திரும்பி வந்தேன். டிக்கியைத் திறந்து பார்த்தேன். பார்சல் இல்லே. எடுத்துக்கிட்டான் இந்த நேரத்திலே. நான் புறப்பட்டு வந்துட்டேன். இப்போ கொஞ்ச நேரத்திலே ஷோபனா வந்துடுவா.''

தலையைப் பிடித்துக் கொண்டார் பாலு.

''மை காட்! மை காட்! அவன் எத்தனை பெரிய சாமர்த்தியசாலி! கே. கே. நகருக்கே அவன் வரலே. போலீஸ் தலையிட்டாலும் பாவ்லா காட்டுறதுக்காக இந்தத் திட்டம். இம்பீரியல் ஹோட்டல் வாசல்லேயே பார்சலை எடுத்துக்கிட்டிருக்கான் டாமிட்!''

''பாத்தியா, என்னமோ திறமை அது இதுன்னியே, உன்னைவிட அவன் திறமைசாலியா இருக்கான் பாரு. எங்கே எடுத்தா என்ன, பணம் அவன் கைக்குப் போயிடுச்சு. கொஞ்ச நேரத்திலே ஷோபனா திரும்பி வந்துடுவா.''

பாலு அமைதியாய் இருந்தார். உள்ளே குமுறல்கள் புறப்பட்டன. தம் மேலேயே எரிச்சல் ஏற்பட்டது. இதை ஊகித்திருக்க வேண்டும். ச்சை!

பாலு எழுந்து நின்றார்.

''தண்டபாணி, உன்னைப் பொறுத்தவரை பணம் போனது பெரிசா இல்லே. ஆனா நான் இதை அவமானமா உணர்றேன். இது சவால். மறுபடி சொல்றேன். இது சவால். ஷோபனா வரட்டும். அவளை முழுக்க முழுக்க விசாரிக்கிறேன். கேஸட்லே அவன் கை ரேகை இருக்கு. அவன் குரல் எனக்குத் தெரியும். ஒரே வாரம். ஜஸ்ட் ஒரே வாரம். அவனைப் பிடிக்கிறேன்.''

''அமைதியா இரு பாலு. உணர்ச்சி வசப்படாதே. மொதல்ல ஷோபனா வரட்டும். அதுக்கப்புறம் நீ அவனைப் பிடிக்கிறதுக்கு எந்த உதவி வேணும்னாலும் நான் செய்யறேன். எதுக்கும் இருக்கட்டும்னு உனக்காக ஒரு உதவி செஞ்சி வச்சிருக்கேன்.''

''என்ன?''

''பால் பாயிண்ட் பேனாவாலே மொத்தம் இருபது நோட்லே சின்னதா 'காட் ப்ளஸ் யூன்னு' எழுதிருக்கேன்.''

''தாங்க்யூ தண்டபாணி. வரிசையா எழுதலையே?''

''இல்லே. அங்கங்கே. சிலநோட்டுகள்லே.''

''அவன் இதைக் கவனிக்கலைன்னா இது நமக்கு உபயோகப்படும் ரொம்ப. ஷோபனாவைச் சொன்னபடி அவன் விடுவிச்சிடுவான்கிறதும்கூட ஒரு நம்பிக்கைதான் நமக்கு. பார்க்கலாம் என்ன செய்யறான்னு.''

''நீ வேற என்னைப் பயமுறுத்தாதே.''

ஷோபனாவுக்காக இருவரும் காத்திருந்தார்கள்.

இரண்டு மணி நேரம் கழித்து டெலிபோன் ஒலித்தது.

தண்டபாணி எடுத்தார்.

''தாங்க்யூ மிஸ்டர் தண்டபாணி. உங்க மக வெட்டர் பாக்ஸிலே இருக்கா'' என்று அவன் பேசிவிட்டு வைத்து விட்டான்.

பாலுவிடம் அவன் சொன்னதைச் சொல்லிவிட்டு பரபரப்பாய் வாசலுக்கு விரைந்தார் தண்டபாணி. கூட ஓடினார் பாலு.

லெட்டர் பாக்ஸிற்குள் சற்றுக் கனமான ஒரு சின்னப் பார்சல் இருந்தது.

அதை அவசரமாக எடுத்துப் பிரிக்கப் போனார் தண்டபாணி.

''இங்கே பிரிக்க வேணாம். உள்ளே போய்டலாம் வா.''

---

நண்பன். 1.:—''எங்க தாத்தா கட்சி மாறிட்டார்டா.''

நண்பன். 2.:— 'எந்தக் கட்சிக்குடா காங்கிரஸ்ஸிலிருந்து ஜனதாவுக்கா?''

நண்பன். 1.:— ''நீ வேற... சிலுக்கு கட்சியிலிருந்து அனுராதா கட்சிக்காக்கும்.''

என். இராமகிருஷ்ணன்.

தாத்தா மாறிய கட்சி!

''என்னடா இது, எனக்குப் புரியலியே.''

''பார்த்தாப் புரியுது.''

இருவரும் தண்டபாணியின் அறைக்குள் வந்தார்கள். பானு பார்சலைப் பிரித்தார். உள்ளே ஒரு கேஸட்டும், இரண்டு கவர்களும் இருந்தன. ஒரு கவரின் மேல் 'திரு தண்டபாணி அவர்களுக்கு' என்று தமிழில் டைப் செய்யப் பட்டிருந்தது. மற்றொரு கவர் ஒட்டப்படாமல் திறந்தே இருந்தது. கவரின் மேல் 'திரு போலீஸ் கமிஷ்னர், தமிழ்நாடு' என்று கையெழுத்தில் இருந்தது.

''இந்தக் கையெழுத்து என் மகளோடது தப்பா'' என்றார் தண்டபாணி.

''இரு. பார்க்கலாம், பதறாதே'' என்று முதலில் தண்டபாணிக்கு எழுதப்பட்ட கவரைக் கிழித்துக் காகிதத்தை எடுத்தார்.

உள்ளே கடிதம் டைப் செய்யப்பட்டிருந்தது தமிழில்.

'வணக்கம்.

நான் சொன்னபடி நடந்துகொண்டு பணத்தைச் சேர்ப்பித்தமைக்கு நன்றி. உங்கள் சோகமான சூழ்நிலையில் நான் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டதற்கு மன்னியுங்கள். பெண்ணைப் பெற்று விட்டால்மட்டும் போதாது. வளர்க்கவும் தெரிய வேண்டும். அதிக செல்லம் நல்லதிற்கில்லை என்பதை இனியாவது உணர்க. இனி உணர்ந்து என்ன பயன்? மூந்தா நாள் இரவு கடற்கரை ஓரமாய் நெடுந்தூரம் நடந்து கொண்டிருந்த போது, கிடைத்தது ஒரு கைப் பை. அதற்குள்ளே இணைத்திருக்கும் கமிஷ்னருக்கான கடிதமும் கேஸட்டும் இருந்தன. தவிர உங்கள் விலாசமும் இருந்தது. என் மூளை திட்டம் போட்டது. விளைவு உங்கள் சொத்தில் ஒரு லட்சம் மைனஸ். உங்கள் மகளின் ஆத்மா சாந்தி யடைவதாக! இறந்துபோனவளுக்காகப் பணம் கொடுத்த வள்ளலே வாழ்க!'

வியர்த்துப் போனார் தண்டபாணி

''தமிழே தெரியாத நடிகைங்க நீங்க. படத்துலே அழகா வாயசைக்கிறீங்க.''

''வசனம் பேச வேண்டிய இடத்துல 'பப்புள்கம்' கொடுத்துத் திங்கச்சொன்னேம்.''

—ராதா.



வசன-கம்

''என்னடா இது? இறந்து போனாளா? கடவுளே... எனக்கு மயக்கம் வருது...''

''இரு தண்டபாணி. மத்ததையும் பார்த்துட்டுத் தீர்மானத்துக்கு வரலாம். எனக்கும் ஒரே குழப்பமாயிருக்கு'' என்ற பானு, கமிஷ்னருக்கு என்று இருந்த கவருக்குள் இருந்த காகிதத்தை எடுத்துப் பிரித்தார்.

குண்டு குண்டான கையெழுத்தில் நேர் நேராக எழுதப்பட்டிருந்தது.

''ஷோபனாவோட கையெழுத்துத்தான் இது!''

''படிக்கிறேன் இரு. உயர்திரு போலீஸ் கமிஷ்னர் அவர்களுக்கு, தொழில் அதிபர் தண்டபாணியின் மகள் ஷோபனா எழுதிக் கொண்டது. காதலில் ஏற்பட்ட தோல்வியின் காரணமாகக் கடலில் குதித்து நான் தற்கொலை செய்து கொள்கிறேன். என் இந்த முடிவுக்கு யாரும் காரணமில்லை. இத்துடன் இருக்கும் கேஸட் ஒன்றைத் தயவு செய்து என் தந்தையிடம் சேர்ப்பித்து விடுங்கள். நன்றியுள்ள ஷோபனா.''

''ஷோபனா!'' என்று கத்தினார் தண்டபாணி.

''சும்மா இரு தண்டபாணி. இப்பவும் என்னால எதுவும் புரிஞ்சுக்க முடியலே கடற்கரை ஓரமா இந்த ரெண்டு நாள்ல எந்த பாடியும் கிடந்து எடுக்கப்படலே. ஸோ, இன்னும் கூட இதெல்லாம் எனக்கு அபத்தமாப் படுது.''

''முட்டாள்! அவ கையெழுத்துத்தாண்டா இது!''

''அவசரப்படாதே. இந்த கேஸட்டையும் போட்டுக் கேட்டுடலாம்.''

பானு டேப் ரிகார்டரை எடுத்து கேஸட்டின் 'ஏ' பக்கத்தைப்போட்டு ஆன் செய்தார். ஷோபனா பேசினாள்.

''டாடி, என்னோட இந்த முடிவு உங்களுக்கு அதிர்ச்சியைத் தரும்னு தெரியும். இந்தத் தீர்மானத்தைத் தவிர எனக்கு வேறு வழியே இல்லே டாடி. என் மேல எவ்வளவு அன்பும், நம்பிக்கையும் நீங்க வச்சிருக்கீங்கன்னு தெரியும். அதுக்கு நான் மோசம் பண்ணிட்டேன் டாடி. என்னே உண்மையா விரும்புறேன்னு ஒரு அயோக்கியன் சொன்ன வார்த்தைகளை நம்பி விட்டேன். கொஞ்சம் கொஞ்சமா என்னே அவன் இணங்க வச்சிட்டான் டாடி. அன்னைக்கு ஒரு நாள் அவன் உங்கப்பாவுக்கு ஆக்ஸிடெண்ட்னு சொன்னப்போ நம்பிப் புறப்பட்டது என் தப்புதான் டாடி. அவனோட ரூமுக்கு அழைச்சுக்கிட்டுப் போய் சும்மா பொய்சொன்னேன்டார்லிங்னு சொல்லி, என்னே அவனோட ஆசைக்கு இணங்க வச்சிட்டான். நானும் அவன் கல்யாணம் செஞ்சுக்கிறேன்னு சொன்னதை நம்பி என்னே இழந்துட்டேன். அதுக்கப்புறம்... அதுக்கப்புறம் அந்தச் செயலோட விளைவை என்னோட உடம்பிலே உணர்ந்தேன் டாடி. எனக்கு என்ன செய்யறதுன்னே புரியலே. அவன் கிட்டே ஓடினேன். சீக்கிரம் எங்கப்பா கிட்ட வந்து கல்யாணத்தைப்

பத்திப் பேசுங்கன்னு சொல்றேன். அவன் சிரிக்கிறான். என்னை வேணும்னு கத்தம் பண்ற துக்கு டாக்டர் கிட்டே அழைச்சுக்கிட்டுப் போறேங்கறான். அதுக்கு நான் ஒத்துக்க லேன்னா என்னைக் கொன்னுடுவேன்னு பயமுறுத் தறான் டாடி. யோசிச்சுப் பார்த்த திலே நான் செஞ்ச தப்புக்கு நான் சாகறது தான் தண்டனைன்னு முடிவு பண்ணேன். நான் உயிரோட இருந்து இந்த அவமானங்கள் வெளிப்பட்டா என்னால உங்களுக்கு கஷ்டம். அதனாலே இந்த அவமானச் சின்னத்தையும் அழிச்சுட்டு என்னையும் அழிச்சுக்கறதுக் காகக் கடலை நோக்கிப் போறேன் டாடி. என்னை மன்னிச்சிடுங்க டாடி.''

விக்கி விக்கி அழ ஆரம்பித்தார் தண்ட பாணி

''முட்டாள் மகளே, இப்படி அநியாயமா முடிவெடுத்திட்டியே ஷோபனா...''

வெறுமனே ஓடிக் கொண்டிருந்த டேப்பை நிறுத்திவிட்டு பானு தண்டபாணியின் தோளில் ஆறுதலாகக் கையை வைத்தார்.

''தண்டபாணி, உனக்கு எப்படித் தைரியம் சொல்றதுன்னே தெரியலே. இன்னும் கூட எனக்கு என்னவோ ஒரு நம்பிக்கை இருக்கு. உன் மக பேசியிருக்கிறபடி கடல்ல விழுந் திருந்தா இந்த ரெண்டு நாளைக்குள்ளே பாடி கிடைச்சிருக்கணும்.''

''ஆனா அந்த பாஸ்டர்ட் கைப்பையைக் கரையோரமாக் கிடந்து எடுத்திருக்கான் பானு. என் மக இன்னும் உயிரோட இருக் கான்னு நம்பச் சொல்றியா?''

''ஸாரி. அப்படிச் சொல்றதுக்கு என் கிட்டே ஆதாரம் எதுவும் இல்லே. எந்த இடத்திலே கைப் பை கிடந்ததுன்னு நமக்கு அவன் எழுதலே. இன்னைக்குக் காலையிலே எதுவும் பாடி கிடைச்சிருக்கான்னு நான் தெரிஞ்சு சொல்றேன். இத்தனை வருத்த மான விஷயத்திலே நடுவிலே பூந்து அந்தப் பொறுக்கி பணம் பண்ணிட்டதுதான் இன் னும் எனக்கு ஆறலே.''

சட்டென்று நிமிர்ந்தார் தண்டபாணி.

''பானு, அவன் முதல்ல அனுப்பின கேஸட்ல ஷோபனா பேசியிருக்காளே...''

''என்னையும் அந்த விஷயம் உறுத்திச்சு. இப்பக் கிளியர் ஆயிடுச்சு. அவன் ரொம்பப் புத்திசாலி தண்டபாணி. இந்த கேஸட்ல உன்கூட ஷோபனா பேசியிருக்கிற வாக்கியங் களிலேருந்து நடு நடுவே சில வாக்கியங்களை மட்டும் கரெக்டா வேற கேஸட்ல பதிவு பண்ணி, உண்மையா அர்த்தமுள்ளதா ஷோபனா பேசின மாதிரியே செஞ்சிட்டான். அவனை நான்... அது அப்புறம். மொதல்ல இப்போ ஷோபனா என்ன ஆனான்னு தெரிய ணும். எனக்கென்னவோ மனசுக்குள்ளே அவ உயிரோட இருக்கான்னு ஏதுவோ சொல்லுது.''

''எப்படி பானு? எப்படி?''

''பார்க்கலாம் இரு'' என்று போனை நெருங்கி ரிஸீவரை எடுத்தார் பானு.

## அத்தியாயம் இரண்டு

கொஞ்சம் சிரமத்துடன் கண்களைத் திறந்தாள் ஷோபனா.

நெற்றியிலும் ஒரு முழங்கையிலும் பான் டேஜ் போடப்பட்டிருந்தது. உடல் முழுக்க வலி தெறித்தது.

கட்டிலிலிருந்து எழுந்திருக்க முயன்றாள்.

நான் எப்படி... இங்கே... இது என்ன இடம்?

அறைக் கதவைத் திறந்து கொண்டு வந்த இளைஞன் உள்ளே வந்தான்.

''கண் விழிச்சிட்டீங்களா? தாங்க் காட். எழுந்திருக்க வேணாம். அப்படியே இருங்க'' என்று அருகில் வந்து ஸ்டூலில் அமர்ந்தான்.

''நீங்க....'' என்றாள்.

''என் பேர் ராஜன். கடல்ல மூச்சுக்குத் தவிச்சுக்கிட்டிருந்த உங்களை நான் காப் பாத்தி என் ரூமுக்குக் கொண்டு வந்தேன். கடந்த முப்பத்தி அஞ்சு மணி நேரமா உங் களுக்கு நினைவு திரும்பல்லே. தலையிலேயும் கையிலேயும் பாறையிலே மோதி காயங்கள். நான்தான் கட்டுப் போட்டேன். டாக்டர் ஒருத்தர் வந்து ஊசி போட்டார். இப்ப நீங்க சொல்லுங்க. யார் நீங்க? எதுக்காக இந்தத் தற்கொலை முயற்சி? காப்பாத்த வந்தப்போ என்னைச் சாக விடுங்கன்னு நீங்க கத்தினீங்க. எத்தனை பிரச்னையிலும் வாழணும்க. பிரச்னை களுக்குத் தற்கொலையை வழியா எடுத்துக்க ஆரம்பிச்சா... உலகத்திலே மனிதர்களே இருக்க மாட்டாங்க.''

வாயால் கொஞ்சம் சுவாசித்தாள்.

''என்னைக் கொஞ்சம் பேச விடுங்க...'' என்று நிறைய தன் தற்கொலைக்கு நியாயம் கற்பித்துக் கடைசியில் அழுதாள். பின் தன்னைப் பற்றி... தன் தந்தையைப் பற்றி எல்லாம் சொன்னாள். ராஜன் எழுந்தான்.

''பக்குவமா உங்கப்பா கிட்டே நான் சொல்றேன். அவர் கிட்டே உங்களை ஒப் படைக்க வேண்டியது என் கடமை. நீங்க அவரோட போய்த்தான் ஆகணும். மறுபடி தற்கொலை பத்தி நினைக்காதீங்க. போன் நம்பர் என்ன சொன்னீங்க?'' என்று கேட்டுக் கொண்டு கதவை நோக்கி நடந்தான்.

''பழம் சாப்பிடுங்க. ரெஸ்ட் எடுத்துக்குங்க''

அறையை விட்டு வெளியே வந்து கதவை ஒரு பூட்டால் பூட்டினான். சாலையில் நடந் தான். பொதுத் தொலைபேசி பூத்தில் நம்பர் சொல்லிவிட்டு உள்ளே போய்ச் சாத்திக் கொண்டு காம் கிடைத்ததும் பேசினான்.

''ஹலோ, மிஸ்டர் தண்டபாணியா பேச றது?''

''ஆமாம்.''

''உங்க ஒரே பொண்ணு ஷோபனா என் கிட்டே பத்திரமா இருக்கா. அவ உங்களுக் குத் திரும்ப வேணும்னா நீங்க ஒரு லட்ச ரூபாயைத் தயார் செஞ்சி வைங்க. எங்கே, எப்படி தரணும்னு அப்புறம் சொல்றேன்'' என்றான்.

(முற்றும்)

# மால்டோவா சீரணி—
# அவர்களது குறும்புகள் வெகு நளினம்
# அதை நீங்கள் எண்ணுதல் வெகு கடினம்!



மால்டோவா பருகும் குழந்தைகள்—பள்ளியிலும், விளையாட்டிலும்—வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் ரசிப்பவர்கள். காரணம்—அவர்கள் பருகும் மால்டோவா...பாலுக்குச் சுவை கூட்டி பன்மடங்கு பலனையும் அளிப்பது.

**சூரிய வெப்பத்தால் முதிர்ந்த கோதுமை, பார்லி மால்ட்**

பஞ்சாபிலிருந்து வரும் கோதுமையும் பார்லியும் மால்டோவா தொழிற்சாலையில் போஷாக்குத் தரும் மால்ட்டாக மாறுகின்றன. அவசியமான தாது உப்புக்களும் வைட்டமின் Bயும் நிறைந்த, நவீன தயாரிப்பு முறையில் உருவான, மால்டோவா அதன் சத்துக்கள் உடலில் எளிதில் கலந்துவிடும் பானமாகிறது.



**தூய, முழுமை யான பால்**

எங்கள் பால் சேகரிக்கும் நிலையங்களில், மால்டோவா தயாரிக்கப் பயன்படும் பால் 100% தூய்மையானது. 100% போஷாக்கு நிறைந்தது.

**சுவை கூட்டும் கோக்கோ**

மால்டோவாவில் தரத்தி லுயர்ந்த வெளி நாட்டுக் கோக்கோ சேர்கிறது. அதன் சீரிய சுவையும், போஷாக்கும் உங்களுக்கு புத்துணர்ச்சி யளித்து இன்பமுறச் செய்கிறது.



**சக்தி தரும் சர்க்கரை**

உயர்தரமான வெண்மை யான சர்க்கரை சேர்ந்தது மால்டோவா...தேர்ந்தெடுத்த இன்னமுதம்...சின்னக் குழந்தைகளுக்கு அதிகச் சக்தி தரத் தேவையான அமுதம்.

**வைட்டமின்களின் விசேஷச் சேர்க்கை**

புரதம், கார்போஹைட்ரேட்டுகள், வைட்டமின்கள், தாது உப்புக்கள் அனைத்தும் இணைந்த ஈடிணையற்ற படைப்பு மால்டோவா. வைட்டமின் A, நயாசின், வைட்டமின் $B_1$, வைட்டமின் $D_2$ இவற்றின் விசேஷச் சேர்க்கை கூடியது. செயற்கைச் சுவையெதுவும் கிடையாது.








JIL ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

Monde (உலக) தரத்தேர்வில் தங்கமெடல் பெற்றது 1981, 1982

**வைட்டமின்கள் கூடிய மால்டோவா:**
**ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு**

SIMOES/JIL/1/83 TM

# மானகிரி முருகவேள்

இசை இன்பத்தைச் சுவைத்துக் கிருதிகளிலுள்ள கட்டுக் கோப்பான அழகையும், ஸாகித்தியத்தில் உள்ள ரஸத்தையும் அனுபவிக்கும் இசை ரசிகர்களுக்கு தீக்ஷிதருடைய நவக்கிரகக் கீர்த்தனைகள் அருவிருந்தாகும்.

'ஸூர்ய மூர்த்தே'யின் ஸாஹித்தியத்தில் உள்ள இளங் கிரணங்களின் ஒளியையும், சந்த்ரம் பஜ மானஸவில் உள்ள தண்மையையும் அனுபவித்தவர்கள் நவக்கிரகங்களுடைய பக்தர்களாகவே ஆகிவிடுவார்கள்.

எப்படித்தான் அத்தனை விஷயங்களை இந்தக் கிருதிகளில் தொகுத்து வைத்தாரென்று ஜோதிட வல்லுனர்கள் எல்லாரும் அதிசயிக்கத் தக்க கிருதிகள் இவை.

நவக்கிரகங்களை எல்லாச் சிவன்கோவில்களிலும் கண்டு அவசர அவசரமாகப் பிரதட்சிணம் செய்கிறோம் அல்லவா? இதில் கல்யாண நவக்கிரக மூர்த்திகளைப் பார்த்திருக்கிறீர்களா?

காரைக்குடிக்கு அருகில் உள்ள மானகிரியில் ஒரு முருகன் கோவில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து கல்யாண நவக்கிரகப் பிரதிஷ்டையும் செய்திருக்கிறார்கள் என்று தெரிந்தபோது இந்தப் புதிய கோவிலைத் தரிசனம் செய்ய வேண்டுமென்று ஆர்வமுண்டாயிற்று.

மானகிரி என்ற பெயரைக் கேட்டு இது ஒரு சிறிய குன்றாக இருக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். அங்கே போனபோது மலை குன்று எதுவும் இருக்கவில்லை. நகரத்தார் பெருமக்கள் வாழும் சிறிய ஊர். கோவிலும் சிறிய கோவில். இந்தக் கோவிலில் நவக்கிரகங்களும் கல்யாணக் கோலத்தில் பத்தினிகளுடன் வீற்றிருக்கின்றனர்.

○ சூரியபகவான்





○ சந்திரன்

இந்த மாதிரி கல்யாண நவக்கிரக மூர்த்திகள் தமிழ் நாட்டில் வேறு இரண்டு இடங்களில் இருப்பதாக அறிகிறோம். திருநெல்வேலி மாவட்டத்தில் கருங்குளம் என்ற ஊரிலும், திருச்சி மாவட்டத்தில் பளூர் என்ற ஊரிலும்.

நவக்கிரக வழிபாடு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் சோழ மன்னர்களால் கட்டப்பட்ட கோவில்களில் காணப்படவில்லை. அப்படிச் சிவாலயங்களில் நவக்கிரகங்கள் காணப்பட்டாலும் அது பிற்காலத் திருப்பணியாகவே இருப்பதை அறிகிறோம்.

வைஷ்ணவ தலங்களில் நவக்கிரகங்களுக்கு அநேகமாகச் சந்நிதி இருப்பதில்லை.

கோள்களின் சஞ்சாரம் மனிதர்களுடைய வாழ்க்கையைப் பாதிக்கிறதா என்று கேட்டால் இதற்கு ஜோதிட சாத்திரம் படித்தவர்கள் ''நிச்சயம் பாதிக்கிறது'' என்று கூறுவார்கள். கதிரியக்கங்களைப் பற்றிய விஞ்ஞான அறிவு இப்போது பெருகி வருகிறது. நமது முன்னோர்கள் கோள்களின் ஆகர்ஷண சக்தியும் கதிரியக்கமும் பூவுலகிலுள்ள நம்மைப் பாதிக்கிறது என்று கண்டார்கள்.

# -: ஆனந்தி :-



○ வள்ளி, தேவசேனா சமேத சுப்பிரமணியர்

அதை ஆராய்ந்து ஒரு சாத்திரமாகச் செய்தார்கள்.

ஜ்யோதிஷம் என்ற சொல்லுக்கு "ஜோதியினால் பெறும் அறிவு" என்று பொருள். ஒளி மயமான எத்தனையோ நெருப்புக் கோளங்கள் அண்டப்பெருவெளியில் நிறைந்து கிடக்கின்றன. சூரிய மண்டலத்தைச் சுற்றி வரும் கோள்களையும், விண் மீன்களையும் வைத்து ஜ்யோதிஷ சாத்திரம் எழுந்தது.

நாம் வாழ்வது பூமி. அதுவும் ஒரு கிரகம்தான். நாம் வசிக்கும் கிரகமும் கூட. சூரியன் இல்லாவிட்டால் ஒளியில்லை. உஷ்ணமில்லை. நீரில்லை, உயிர் இல்லை. நாமே இல்லை. சந்திரன் பூமியை நெருங்கி வரும் நாட்களில் கடல் அலைகள் பொங்கி ஆர்ப்பரிக்கின்றன. மற்ற கிரகங்கள் சந்திர சூரியர்களைப் போல் நமக்குத் தெரிந்து பாதிப்பை ஏற்படுத்தாவிட்டாலும் பாதிக்கவில்லை என்று எவ்வாறு கூறமுடியும்?

அண்ட வெளியில் எத்தனையோ கோடி நக்ஷத்திரங்கள் இருக்கின்றன. ஆனால் 27 நட்சத்திரங்களை மட்டும் நாம் பிறந்த நேரத்தோடு தொடர்புடையதாகக் கூறுகிறார்கள். நவக்கிரகங்களோடு தொடர்புடைய நக்ஷத்திரங்களை மட்டும் எடுத்துக் கொண்டார்கள் போலும். சந்திரனுடைய பாதையில் உள்ள நட்சத்திரங்களின் பெயர்களைப் பஞ்சாங்கத்தில் பார்க்கிறோம்.

சிவநேசச் செல்வரான நாவுக்கரசர் பெருமானே திருஞான சம்பந்தரிடம், "கோள்களின் நிலை சரியாக இல்லை, சமணருடன் வாதம் செய்யப் போகவேண்டாம்" என்று கூறியதாக அறிகிறோம். சனீச்வர பகவானின் வன்மத்தினால் நளன் பட்ட கஷ்டங்களை நைடதத்தின் மூலம் அறிகிறோம். திருக்கச்சி நம்பி போன்ற பக்தர்களைக் கூட சனி பகவான் விடவில்லை என்று கதை.

சூரிய மூர்த்தியைக் கிரகம் என்று சொன்னாலும் அவர் சுயம் பிரகாசமான நட்சத்திரம் என்பதை நாம் அறிவோம். மற்ற கோள்கள் இவருடைய வெளிச்சத்தைப் பிரதிபலிக்கின்றன. ஆகக் கூடி எல்லாம் சூரிய ஒளியே ஆகிறது. சூரிய பகவானைக் காத்தல் கடவுளான நாராயணனாகவே வழிபடுகிறோம். சங்கராந்தி பூஜையில் "சாயாஸுவர்ச்சலா சமேத ஸூர்ய நாராயண ஸ்வாமி நே நம:" என்று கூறி வணங்குகிறோம். அந்தந்தக் கோள்களின் ஈர்ப்புச் சக்தியானது நாம் வசிக்கும் இந்தப் பூமியையும் பாதிக்கிறது.

இந்தக் கோள்களுக்கு நன்மை தரவும், தீமை செய்யவும் சக்தி இருப்பதாக நாம் நம்புகிறோம். ஆகையால் இந்த நவக்கிரக மூர்த்திகளை மகிழ்ச்சியோடு வைத்திருக்க வழிகளைத் தேடுகிறோம். தோத்திரங்கள் சொல்கிறோம். அந்தந்த மூர்த்திகளுக்கு உகப்பான மணிகளை நவரத்தினங்களை அணிகிறோம். அவரவர் வாகனங்களில் எழுந்தருளச் செய்து கொண்டாடுகிறோம். அந்தந்தக் கிரகத்துக்கு அதி தேவதைகளை வழிபட்டுப் பிரார்த்திக்கிறோம்.

கல்யாணக்காலத்தில் எல்லாருமே மகிழ்ச்சியோடுதான் இருப்பார்கள். ஆகவே கல்யாணக் கோலத்திலேயே நவக்கிரக மூர்த்திகளையும் எழுந்தருளச் செய்து வழிபட்டால் நிச்சயம் அவர்கள் உள்ளம் மகிழ்ந்தும், பார்வை குளிர்ந்தும்தான் இருக்கும். கல்யாணக் கோலத்தைப் பார்ப்பதில் நமக்கும் உவகை உண்டாகிறது. திருப்பதியில் 'திருக்கல்யாணம்' செய்து வைத்துப் பெருமானைக் கல்யாணக் கோலத்தில் கண்டு மகிழ்பவர்கள் நாம். பங்குனி உத்தர நட்சத்திரத்தில் திருக் கல்யாண உற்சவம் எல்லாக் கோயில்களிலும் நடைபெறுவதைப் பார்க்கிறோம்.

இருநூறு ஆண்டுகளாக மானகிரி கோவிலில் வேல் ஆயுதத்தை மட்டும் வைத்து வழிபாடுகள் செய்து வந்தார்கள். மானகிரி பல காரணங்களால் நலம் குன்றி

○ சனீஸ்வரர்



வந்தது. சில ஆண்டுகளுக்கு முன் காஞ்சிப் பெரியவர்கள் ராமேச்வரத்துக்கு வந்து முகா மிட்டிருந்தபோது இந்த ஊர் நகரத்தார் பெருமக்கள் அவரிடம் சென்று ''எங்கள் ஊர் மேன்மையடைய வேண்டும். தாங்கள் அருள் செய்ய வேண்டும்'' என்று பிரார்த் தித்துக் கொண்டார்களாம். அன்பர்களு டைய நலத்தையே, அறம் ஓங்குவதையே கருத்தில் சதாக் கொண்டுள்ள கருணைக் கடலான பெரியவர்கள் 'வேலாயுதம் உள்ள கோவிலில் முருகப் பெருமானைப் பிரதிஷ்டை செய்து, நவக்கிரகங்களுக்கு மண்டபமும் கட்டிக் கும்பாபிஷேகம் செய்யுங்கள். ஊருக்கு மேன்மை உண்டாகும்' என்று அருளினார்கள்.

அதன்படியே மிகவும் சிரத்தையோடு நிதி திரட்டிச் சுமார் இரண்டு லட்ச ரூபாய் செலவில் கோவில் கட்டி முடித்து, சென்ற ஜனவரி மாதத்தில் கும்பாபிஷேகமும் செய் தார்கள்.

விக்ரகங்களை ஸ்தாபனம் செய்துவிட்டு மருந்து சாத்துகிற சமயத்தில் அதுவரை வழிபட்டு வந்த வேலாயுதத்தை முருகப் பெருமான் கையில் சாத்த வேண்டும் என்பது ஏற்பாடு. கும்பாபிஷேகத்துக்காக அழைக் கப்பட்டிருந்த திருவாடானை திரு கணேச குருக்கள் வேலை எடுக்கச் சென்றார். அவர் எவ்வளவு முயன்றும் வேல் பீடத்திலிருந்து கிளம்பவில்லை. கூடியிருந்த நகரத்தார் பெருமக்கள் வியப்போடு பார்த்துக்கொண் டிருக்கும்போதே அவர் மீது அருள் வந்து, ''வேல் தனியாகவே இருக்கட்டும். விநாய கருக்கும் வேலுக்கும் ஆராதனை செய்த பிறகே முருகனுக்கு ஆராதனை செய்ய வேண் டும்'' என்று வாக்குப் பிறந்தது. அப்படியே செய்து வருகிறார்கள்.

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி சிறிய வடிவம். ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேதராக அவரும் கல்யாண மூர்த்தியாகவே தரிசனம் தருகிறார். கல்யாணக் கோலத்தில் நவக்கிர கங்களும் மாலை அணிந்து மங்களகரமாக விளங்குகிறார்கள்.

கன்னிப் பெண்கள் இந்தக் கோயிலில் மூன்று சனிக் கிழமைகள் வழிபட்டால் உடனே கல்யாணம் நிச்சயமாகிறதாம்.

ஊருக்குப் பல விதங்களில் மேன்மை உண்டாகி யிருப்பதாகவும் கூறுகிறார்கள்.

கந்தப் பெருமானுடைய கடைக் கண் நோக்கு இருந்து விட்டாலே குறைகள் எல்லாம் பறந்து போய்விடும்! வேலின் சக்தி வேறு இருக்கிறது.

''சுற்றி நில்லாதே! போ! பகையே
துள்ளி வருகுது வேல்!'' என்று பாடுகிறார்
அமர கவி பாரதியார்.

மானகிரி கோவிலில் வைகாசி மாதம் கடைசி வெள்ளிக் கிழமை யன்று மகேச்வர பூஜை நடைபெறுகிறது. அன்று சுவாமிப் புறப்பாடு உண்டு. செவ்வாய்க் கிரகத்துக்கு அதிபதி முருகப் பெருமான். வெள்ளிக் கிரகத்துக்கோ வள்ளியம்மையார். வள்ளி யம்மையாரின் அருளைப் பெற்ற இந்த ஊருக்கே சுக்ர தசை உண்டாகக் கேட் பானேன்!

எல்லாக் கோள்களும் இறைவனின் பரி வாரத் தேவதைகளே! ஈசன் அருள் பெற்றவர்களுக்கு அகில புவனமும் மங்கள வடிவமாகவே தோன்றும்.

இதையே அருட் குழந்தையான ஞான சம்பந்தர் அவை நல்ல நல்ல என்று பாடினார். கார்த்திகேயனிடம் அளவற்ற பக்தியோடு விதவிதமான சந்தங்களில் திருப்புகழ் பாடிய அருணகிரி நாதரும் அதையே கூறுகிறார்.

நாளென் செயும்வினை தானென்
செயுமெனை நாடி வந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென்
செயுங்கும ரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே!

—கந்தரலங்காரம்.

மானகிரியில் குடிகொண்டுள்ள முருகப் பெருமானின் அடியார்களாகவே இருந்து ஒன்பது கோள்களும் நாட்டுக்கு நலம் தரு வார்கள்.

ஊரிலிருந்து சற்றுத் தூரத்தில் கண்மாய் இருக்கிறது. அதற்குப் பக்கத்தில் ஊருணி இருக்கிறது. இவற்றின் இடையில் ஓர் இடிந்த கோவிலைப் பார்க்கலாம். அகஸ்தீச் வரம் என்ற பெயருடைய இந்தக் கோவில் கவனிப்பார் இன்றி இருக்கும் நிலையைக் கண்டு மனம் புழுங்குகிறது. ஒவ்வொரு கல்லிலும் கல்வெட்டு இருப்பதைக் காண லாம். சோழ அரசர்கள் கட்டிய கோவில் என்பது பார்த்த உடனேயே தெரிகிறது. புதைபொருள் ஆராய்ச்சி செய்வோரா வது கவனிக்க வேண்டும். கல்வெட்டுக் களைப் படி எடுக்க வேண்டும். தமிழக வரலாற்றில் புது செய்திகள் கிடைக்கலாம்.

''அவர் ஒரு சரித்திரப் பேராசிரியர் என்று எப்படிச் சொல்றீங்க?''

''தம் மகன்களுக்கு முதலாம் சீனிவாசன், இரண்டாம் சீனிவாசன்னு பேர் வெச்சிருக்காரே!''

—ஏ. வி. தேவன்

சரித்திரம் பேசுகிறது



# கண்கள் இல்லாத அழுகை



ஒரு
மெழுகுவத்தியின் பயணம்
என்
மெல்லிய மனத்தில் சலனம்
நெருப்பில் நின்று
நீராடும்போதும்
நிம்மதியான நளினம்!

இந்தப் பூச்செடிக்கு
என்ன நேர்ந்தது
திராவகப் பூக்கள் பூக்கிறதே!
தன்
வேருக்கு வெந்நீர் வார்க்கிறதே!

எரிகின்றபோதிலும்
என்ன அதிசயம்
சிரித்துக்கொண்டே இருக்கிறதா?
இல்லை
மரித்துக் கொண்டே சிரிக்கிறதா?

மெழுகு ராணியின்
மேனி கரைந்தும்
கைகள் இல்லாமல் தொழுகிறாள்!
இரு
கண்கள் இல்லாமல் அழுகிறாள்!

அக்கினிக் கொழுந்தின்
நுனியில் அடடா
நானே அல்லவா தெரிகின்றேன்
அதில்
நானே அல்லவா எரிகின்றேன்.

**வைரமுத்து பக்கம்**

"நாளைக்கு நானும், அம்மாவும் உன்னைப் பொண்ணுபார்க்க வரப்போறோம்" இடுப்பில் கைகளைச் சுற்றிக் 'கமல்' தனமாக வெடுக்கென்று ஒருமுறை கிள்ளினான் முரளி.

"எனக்கு இது பிடிக்கலே, அத்தான்!"

"எது?"

"நீயோ எனக்கு அத்தை மகள். என்னிக்கோ நிச்சயமான ,சமாச்சாரம் இது. இதுக்குப் போய் வேண்டாத ஃபார்மாலிட்டீஸ் எல்லாம் எதுக்கு?"

## மூணு பாக்கி!



"எட்டு சோடா குடிச்சும் தலைவர் பேச்சை முடிக்கக் காணோமே?"

"அவர் பதினொரு சோடாவுக்குப் பணம் கொடுத்திருக்காராம்."

—ஈழை. அ. கதிர்வேல்.

"அம்மா ஆசைப்படறாங்களே ஹேமா!"

"போ... அத்தான்!"

"தோ பாரு. இனிமே என்னை வா, போன்னு எல்லாம் கூப்பிடக் கூடாது. கழுத்துல தாலி ஏறப் போகுது. ஞாபகம் வச்சுக்கோ."

"ம்ஹூம். எனக்கு அப்படி கூப்பிட்டாத்தான் பிடிக்கும். அப்பத்தான் உங்கிட்ட ஒரு நெருக்கம் இருக்கு"... அவனது முன்னுச்சி மயிரைப் பிடித்துச் செல்லமாகக் குலுக்கினாள்.

"போலாமா?"

"என்ன அவசரம்?" உதட்டோரம் விரல்களால் கவிதை எழுதினான்.

"போதும் சேஷ்டை. நேரமாச்சு."

எழுந்தாள்.

வீடு நோக்கி நடக்கும் போது அதைச் சொல்லலாமா? என்று நினைத்து வேண்டாமென்று ஒதுக்கினாள்.

"இது அநாவசியம் ஹேமா. எனக்கென்னவோ பிடிக்கலே. அப்படியென்ன தேவை உனக்கு வந்தது?"

"போய்த்தான் பார்க்கலாமே டாடி!"

"என்னம்மா நீ? முரளி உன்னைக் கட்டிக்கப் போறவன். நீ வேலைக்குப் போறதில அவனுக்கு இஷ்டம் இருக்குமோ இல்லையோ.... ஒரு வார்த்தை...?"

"வேலை கிடைக்குமாங்கிறதே இன்னும் நிச்சயமில்லையே டாடி. இது வெறும் இண்டர்வியூதானே! இதை எதுக்கு அத்தான் கிட்ட? நானும் நேத்திக்கு நெனைச்சேன். ஆனால் சொல்லலே."

"இன்னிக்கு உன்னைப் பொண்ணுபார்க்க உங்கத்தை வர்ரா. அதுக்குள்ள சீக்கிரமா வந்து சேரு."

"சரி டாடி!" கைப்பையோடு அவசரமாகத் தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கினாள்.

பஸ் இறங்கி, விலாசத்தைச் சரி பார்த்துக் கொண்டாள்.

மேகத்தை முத்தமிடத் துடிக்கும் அந்தக் கான்கிரீட் பில்கட்டைக் கண்களால் அளவைத்தாள்.

லிஃப்டில் ஏறி 'எட்டு' என்றாள்.

எட்டியது.

அந்தப் பெரிய ஹாலில் பல முகங்கள், ஆர்வ முகங்கள், கவலை முகங்கள், வேர்வை முகங்கள் எல்லாமாக ஒரு கலவை இருந்தது.

நாலு இலக்கச் சம்பளமாம்...

ஏராளமான சலுகைகளாம்....

நாக்கைச் சப்புக் கொட்டிக்கொண்டுகாத்திருந்த கூட்டத்தில் ஹேமாவும் கலந்து கொண்டாள்.

# எனக்குள்ளே நீ இருக்க...

தேவிபாலா

''இங்கே ஆர். ஹேமா யாரு?''. ஆபீஸ் பையன் கஞ்சி போட்ட சட்டையோடு மொட மொடப்பான வார்த்தைகளை வீசினான்.

எழுந்து நடந்த போது லேசான ஒரு பர பரப்பு தொற்றிக் கொண்டது.

கதவை அழுத்தித் திறந்த போது ஏ. ஸி. முகத்தில் ஆவேசமாகத் தாக்கியது.

''டேக் யுவர் ஸீட்...'' சொல்லி விட்டுச் சுழற் நாற்காலி அசைந்து திரும்பி, முகம் முன்பக்கம் வந்த போது... ஹேமாவின் நெஞ்சுக்குள் பளீரென ஒரு மின்சார அலை தாக்கியது...

''நீ... நீ... நீங்க...?''

''நானே தான் ஹேமா...! அப்ளிகேஷன் ஹேமா'ன்னு பார்த்தப்ப அது நீயா இருக்கக்



கூடாதான்னு மனமும் ஏங்கினது நிஜம். ஐ'ம் வெரி ஹாப்பி.''

''பட் ஐ'ம் நாட்...!''

''ஹேமா, நீ இன்னும் அதை மறக்கலையா? மனுஷனாப் பிறந்தவன்கிட்ட மாத்தமே இருக்காதுன்னு நினைக்கறியா ஹேமா?''

''அதுபத்தி எனக்குத் தெரியாது. அநாவசிய விளக்கங்களும், பேச்சுக்களும் தேவை இல்லே.''

''ஹேமா ப்ளீஸ்! படபடக்காதே! என் மனசை ஒரு முறையாவது உங்கிட்ட திறந்து காட்டணும்னு ஆசைப்படறேன்.''

''மன்னிக்கணும் வேரே அழுகிப்போனப்புறம், பூவைப் பத்திக் கற்பனை பண்ண நான் புத்தி கெட்டவளில்லே.'' மெதுவாக எழுந்தாள்.

அதற்குள் பஸ்ஸர் ஒலிக்க, எடுத்தான்.

''ராம், என்னோட ரூமுக்குக் கொஞ்சம் வரணுமே!'' அப்பா அழைக்க,

''ஹேமா, போகாதே, பத்து நிமிஷத்துல நான் வந்துடறேன்'' அவசரமாக அங்கிருந்து அகன்றான்.

போய் விடலாமா என்று ஒருகணம் யோசித்தவள் அதைச் சட்டெனக் கழித்தாள். ''வேணும், நான் வாழப் போற வாழ்க்கையை இவன்கிட்ட சொல்லிட்டுத்தான் இடத்தை விட்டு நகரணும்.'' சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

அது ஒரு கோ—எஜுகேஷன் கல்லூரி. மரத்தடியில் முடிச்சு முடிச்சாக மாணவர்கள்.

கல்லூரியின் கொச்சையான ஆங்கிலங்கள், பச்சையான பரிபாஷைகள்.

''தோ... போறாளே, அது செம ஃபிகர் மச்சி. சும்மா சிலுக்கு மாதிரி....''

''ஊர்ல எத்தனையோ பொண்ணுங்க. இவ என்ன பெரிய ஒலிவியா நியூட்டன் ஜானா?''

''அவரைக் குழந்தை எழுத்தாளர் என்கிறீர்களே, குழந்தைகளுக்காகக் கதை எழுதுவாரா?''

''இல்லே, சன்மானத்திற்குப் பதில் சாக்லேட் கொடுத்தாலும் வாங்கிக் கொள்வார்!''

—ஏ. வி. தேவன்



சாக்லேட் எழுத்தாளர்

''அ... ஆங்... இன்னு மாமு சதாய்க்கிறியே! அப்படின்னு அந்தப் பொண்ணுக்கு ஒரு 'லவ் லெட்டர்' குடேன் பாக்கலாம். தைரியம் இருக்கா?''

''பொல்லாத தைரியம். இது ஒரு கஷ்டமான வேலையாக்கும்? எப்ப குடுக்கணும்?''

திடீரென அந்தக் கூட்டத்தில் ஒரு சுவாரசியம் தட்ட, 'லவ் லெட்டர்' எழுதத் தொடங்கினார்கள். ராம் அந்தஸ்தில் மளமளவென உயர்ந்து போனான். மற்றவர்களால் ஒரு கதாநாயகனாகப் பார்க்கப் பட்டான். அதில் அவனுக்கு ஒரு போதை.

''லெட்டர் ரெடிடா!'' அந்தக் கல்லூரியின் வைரமுத்துவாக வர்ணிக்கப்படும் ஒருவன் தன் கவிதைகளைக் காகிதத்தில் பூசி, காதல் கடிதமாக ராமிடம் தந்தான்.

நடையில் ஒரு கம்பீரத்தைச் சேர்த்துக் கொண்டு, அவளை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

நெருங்கி விட்டான்.

''ஹேமா...! ப்ளீஸ் இதைப் படியேன்!''

இந்தக் கோணத்தில் சிந்திக்காத ஹேமா, ஒரு அவசர நொடியில் அதைப் பிரித்தாள்.

என் தோளைச்சுடும்
உன் மூச்சுக் காற்றுக்கு
ஏன் இத்தனை வெப்பம்?
உனக்குக் காதல் ஜுரமா?
இருந்தால்
இந்தா
முழுங்கிக் கொள்
முத்த மாத்திரை ஒன்றை!

தாக்கப்பட்டவள் போல நிமிர்ந்தாள். அடிபட்ட பார்வையில் பார்த்தாள்.

அடுத்த கணம்...

அது நிகழும் என்று அவனே எதிர்பார்த்திருக்க மாட்டான்....

பளீரென ஆவேசமாக விரல்களை அவன் கன்னத்தில் இறக்கி விட்டு விறுவிறுவென நடந்து மறைந்தாள்.

அத்தனை பேரின் பார்வையும், அந்த நிகழ்ச்சியைச் சந்திக்க,

''நல்ல தைரியம்டா கண்ணு...'' என்று ஒருவன் கமெண்ட் அடித்தான்.

''கோச்சுக்காதேம்மா. இது ஆரம்பம். ரொம்ப 'த்ரில்'லா இல்ல? இதுக்கே கவலைப்பட்டா? ஆஃப்டர் ஆல், ஒரு லெட்டருக்கே அடிச்சிட்டா. ஒரு பொட்டைக் குட்டிக்கே அவ்ளோ தைரியம்னா, நீ ஆம்பளை இல்ல? நீ ஆம்பளையானா பத்துப் பேருக்கு முன் அவளை 'கிஸ்' பண்ணணும்!''

அவன் நினைக்காத ஒன்றை நாலுக்காக அவன் நெஞ்சுக்குள் ஏற்றி, அவன் ஆண்மையைச் சீண்டத் தொடங்க, தன்னை மறந்து மறுபடியும் அவர்களின் வலையில் வசமாகச் சிக்கிக் கொண்டான் ராம்.

ஹேமா வந்ததும், அவளருகே சென்று மின்னல் வேகத்தில் தன்னோடு இணைத்து, இறுக்கி, துள்ளத் துடிக்க... அவள் இதழ்

களில் ஆவேசமாகப் பதிலை எழுதிவிட்டு... விடுவித்தான்.

அந்த மைதானமே ஸ்தம்பித்து நிற்க....

விஷயம் பிரின்ஸிபால் வரை போக....

ராம் கல்லூரியை விட்டு நீக்கப்பட்டதும், அவமானம் தாளாத ஹேமா படிப்பையே நிறுத்தியதும், பழைய கதை....

அந்த ராம்...

அதே பழைய ராம்...

''நீ இருக்கியா ஹேமா... ரொம்ப தேங்க்ஸ். பைத பை உங்கிட்ட நான் மன்னிப்பு கேட்டா அது போலியா இருக்கும். உன் காயத்துக்குக் காரணம் இருக்கு. அந்த வலி கடுமையானதுன்னு எனக்கு அப்பப் புரியலே ஹேமா. இப்பப் புரியுது. அதுக்காக நான் அழாத நாளே இல்லே''

''சீதைக்காக ராவணன் ஆசைப்படறது அர்த்தமில்லாத காதல் மிஸ்டர் ராம். என் ராமன் எனக்காகக் காத்துக்கிட்டு இருக்கார். நான் வரட்டுமா?''

''ஹேமா கடைசியா ஒண்ணு. நீ என்னே இன்னமும் ராவணனு நினைக்கறது உன் சொந்த விருப்பம். ஆனா என் கதவுகள் உனக்காகத் திறந்திருக்கும். தப்பு செஞ்ச வன் எல்லாம் வாழ்நாள் முழுக்க அயோக் கியனுவே இருக்கறதில்லேனு போகப்போக உனக்குப் புரியும்.'' அதைச் சொல்லும் அவனது கண்கள் தளும்பி நிற்க, ஒரு விநாடி ஹேமாவுக்கு நெஞ்சைப் பிசைந்தது. திரும்பிப் பார்க்காமல் நடந்தாள்.

வீட்டுக்குள் நுழைந்த போது அத்தையும், அத்தானும் இருந்தார்கள்.

''என்னம்மா ஆச்சு இண்டர்வியூ?''.

''கிடைக்காதுப்பா.'

''நீ வேலைக்குப் போக உங்க அத்தை சம்மதிச்சிட்டாங்க.''

முரளியை நிமிர்ந்து பார்த்தாள் ஹேமா. தோரணையோடு உட்கார்ந்திருந்தான்.

'ஹே... அத்தான் திமிரைப் பாரு! தெரியாத மாதிரி மாப்பிள்ளை முறுக்கோட ஒக்காந்திருக்கியா, வெளியே வா கவனிச்சுக் கிறேன்' அத்தை பார்க்காத சமயத்தில் உதட்டைச் சுழித்துப் பழிப்புக் காட்டினாள்.

''அப்புறம் மத்த விஷயங்கள்ளாம் எப்படி அண்ணா?''

''எதும்மா? முகூர்த்தம்தானே?''

''அது கடைசில. நீ என்ன செய்யப் போறே ஹேமாவுக்கு.''

''இது நம்ம வீட்டுக் கல்யாணம்தானே? இதெல்லாம் எதுக்கு?''

''நல்லாருக்கே! முரளி பாங்கில ஆபீஸர். லட்ச லட்சமாகக் கொட்டிக் குடுக்க க்யூல வந்து நிப்பாங்க. அண்ணா உறவு வேறே. சமூக அந்தஸ்து வேறே... கழுத்துக்கும் கைக்குமா முப்பது சவரன் போட்டுடு. கையில இருபது போதும். மத்தபடி நல்ல படியா கல்யாணத்தை....''

''ஜானகி... என்னோட நிலைமை தெரிஞ்சுமா? மாப்பிள்ளை நீ எதுவுமே பேசலியே.''

''அதான் அம்மா சொல்றாங்களே!''

அப்பா, அதை நம்ப முடியாமல்தளர்ந்து தள்ளாடிப் போக...

கேட்டுக் கொண்டிருந்த ஹேமா புயலாக வெளிப்பட்டாள்.

''அப்பா இவங்களை வெளியே போகச் சொல்லுங்க.''

''ஹேமா...!''

''வியாபாரம் படியலேன்னு நேரத்தை வேஸ்ட் பண்றீங்க... கெட் அவுட் ஐ ஸே...''

அத்தை முறைக்க...

முரளி அவமானத்தில் சிறுக்க....

கண்ணீரோடு வாசல் பக்கம் கையைக் காட்டினாள் ஹேமா.

அப்பா அழுதார்.

''ஏம்பா அழறீங்க? என் ராமன் போறானேன்னு அழறீங்களா?''

—'என் கதவுகள் உனக்காக எப்பவும் திறந்திருக்கும் ஹேமா.'

—'தப்பு செஞ்சவன் எல்லாம் வாழ்நாள் பூராவும் அயோக்கியனாகவே 'இருக்கிற தில்லே.'

''இப்படிப் பண்ணிட்டாளேம்மா...நிச்சயமானது நின்னு போச்சேம்மா.''

''கவலைப்படாதீங்கப்பா. நிச்சயிக்கப்பட்ட இந்த ராமனை விட, எனக்காகக் காத்திருக்கிற ஒரு ராவணன் இருக்கார்ப்பா. இந்த ராமனை விட அந்த ராவணனே மேல்.''

அப்பா புரியாமல் விழிக்க......

ராமிடம் செய்தியைச் சொல்ல,செருப்பை மாட்டிக் கொண்டு வீதியில் இறங்கினாள் ஹேமா.

## நாம் யார்க்கும் அஞ்சோம்

ஒரு பையன்: எங்களுக்குத் திருட்டுப் பயமே கிடையாது. நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் எல்லாவற்றையும் பாங்கில் லாக்கரில் வைத்திருக்கிறோம்.

மற்றவன்: எங்களுக்கும்தான் பயம் கிடையாது. எங்கள் வீட்டிலே எல்லாவற்றையும் மார்வாடி அடகுக் கடையில் வைத்திருக்கிறோம்.''

—வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி





அருள் மிகு

# சுப்பிரமணிய சுவாமி

## திருக்கோயில்

### திருத்தணிகை

**ஆடி பரணி 2-8-83**

**ஆடிக் கிருத்திகை 3-8-83**

தெப்பத் திருவிழா

**3-8-83 முதல் 5-8-83 வரை**

## சிறப்பு இன்னிசை நிகழ்ச்சிகள்

3-8-'83

முதல் நாள் தெப்பம்
இசை ஞானமணி கலைமாமணி
**எஸ். ஆர். ஜி. சம்பந்தம்**
கோகில்கான இசைச் செல்வர்கள்
**எஸ். ஆர். ஜி. எஸ். வசந்தகுமார் — மோகன்தாஸ்**
ஆகியோர் நாதசுர இசை

4-8-'83

இர்ண்டாம் நாள் தெப்பம்
"திரை இசையமைப்பாளர்"
"முருக கானமிருத"
**சூலமங்கலம் சகோதரிகள்**
குழுவினரின் இன்னிசை

5-8-'83

மூன்றும் நாள் தெப்பம்
பத்மஸ்ரீ கலைமாமணி டாக்டர்
**சீர்காழி எஸ். கோவிந்தராஜன்**
குழுவினரின் இன்னிசை

அனைவரும் வருக    அருள் பெற்றுச் செல்க

த. நாகராசன், பி.எஸ்.சி.,
உதவி ஆணையர் / நிர்வாக அதிகாரி

பேரம்பாக்கம்
இரா. சண்முகம், எம்.எல்.ஏ.
தக்கார்

# பெண் மடாதிபதியாவது முறையானதா? முரணானதா?

இந்து சமய வரலாற்றில் இத்தகைய நிகழ்ச்சி இதற்கு முன் நிகழ்ந்ததில்லை! ஆத்திக அன்பர்களால் புதுக்கோட்டையில் உருவாக்கப்பெற்ற திலகவதியார் திருவருள் ஆதீனம்— பெண் துறவி ஒருவரைப் பீடாதிபதியாகக் கொண்டது! ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகளின் அருளாசியுடன், தமிழகத்துத் திருமடங்கள் சிலவற்றின் குருமகா சன்னிதானங்களின் முன்னிலையில் தவத்திரு சாயிமாதா சிவ பிருந்தா தேவி அம்மையார் (படம்) ஆதீன அருளாட்சி ஏற்றிருக்கிறார். இது முறையானதா? மரபிற்கு முரணானதா? அருளாட்சி ஏற்பு விழாவுக்கு வருகை புரிந்தோர் சிலரிடம் கேட்டபோது:

**சாஹித்யகர்த்தா, கலைமாமணி சிதம்பரம் வி. வி. ஸ்வர்ண வெங்கடேச தீட்சிதர்:**

''சக்தியின் ஆட்சி அதுவும் அருளாட்சி சரியானதே! அன்னை சாயி மாதாவைப் பத்து வருஷங்களுக்கு முன் காசியில் சந்தித்தேன். அப்போதே அன்னையின் பூரணசக்தியை அறிந்து தெளிந்தேன். இதுவரை செய்யாத காரியம் என்பதால் அது தவறாகாது! செய்து வந்த காரியம் அனைத்துமே சரியானதாகவும் ஆகிவிடாது!''

**திருப்பணிச் சக்கரவர்த்தி, அருட் கவியரசு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்:**

''தூண்டு தவ விளக்கு எனச் சேக்கிழார் சுவாமிகளால் போற்றப் பெறுகிற திலகவதியாரின் திருநாமத்தைப் பெற்ற ஆதீனம்— ஆண்டருளும் அருளாட்சி மேற்கொள்ள, அன்னை சாயி மாதாவைப் பூண்டுகொண்ட நிகழ்ச்சி பொருத்தமுடையதே! திருநாவுக்கரசு சுவாமிகளின் வரலாற்றில் திலகவதியார் பற்றிய செய்தி பாதியோடு நின்றுவிடுகிறது. மீதியைத் தெரிவிக்கவே உருவாகியுள்ளது இந்த ஆதீனம்.''

**வடசென்னை தெய்வப்பணி மகளிர் மன்றத் தலைவி தெய்வநாயகி ஜோதி:**

''நான்கு ஆண்டுகளுக்கு முன் அம்மாவை வடலூரில் கண்டெடுத்தேன்! ஆம்; அம்மா பக்தி நெறிப் புதையல்! கருணைப்பெட்டகம். அருட் பேழை! அவர்கள் — பால் வேறுபாட்டுக்கு அப்பாற்பட்டவர்கள்! எனவே பெண் ஆண் என்ற பேச்சுக்கே இங்கே இடமில்லை! திலகவதியார் பெயரில் அமைந்த ஆதீனத்திற்கு அம்மாவே முற்றும் பொருத்தமுடையவர்கள்.''

**ஷண்மத ஆஸ்ரமத் தொண்டர் புலவர் சு. கிருஷ்ணன்:**

''சின்ன வயதிலிருந்தே அம்மாவின் ஆதரவில் வளர்ந்து வருகிற ஏழை அந்தணச் சிறுவன் நான். பாசம் மிக்க எங்கள் அம்மா எல்லோரிடத்தும் நேசம் மிக்கவர்கள். அவர்களது நேசம் — ஜாதி மதங்களைக் கடந்தது. தமிழ்ப் புலவராக என்னை ஆக்கியிருக்கும் அம்மா ஹரிஜனப்பிள்ளைகளிடத்தும்நெகிழ்ந்த அன்புடையவர்கள். அம்மா ஆதீனகர்த்தராக வீற்றிருப்பது என்னைப் போன்ற பல உள்ளங்களின் பிரார்த்தனையின் விளைவுதான்.

**பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க இராம சுவாமி அடிகளார்:**

''தொல்காப்பியர் ஆண் துறவை 'தாவத வாகை' என்றும், பெண் துறவை 'தாவத நிலை' என்றும் சுட்டுவார். வாகை என்றால் முயன்று வெற்றி பெறுவது. நிலை எனில் நிலை பெற்றது. எனவே தவத்தில் நிலையானவர்களான பெண் துறவியர் ஆதீனத் தலைமை ஏற்பது சிறப்புடையதுதானே?''

- குன்றக்குடி பெரிய பெருமாள்



**"கல்கி"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 62–40 |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 31–20 |
| **வெளிநாடு கப்பல் தபால் மூலம்** | | |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 140/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 70/- |

**"மங்கையர் மலர்"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 18/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 9/- |
| **வெளிநாடு கப்பல் ,தபால் மூலம்** | | |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 40/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 20/- |

**"கோகுலம்"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 12/- |
| **வெளிநாடு கப்பல் தபால் மூலம்** | | |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 45/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 22–50 |

சந்தா தொகையை M.O. அல்லது I.P.O. அல்லது டிமாண்டு டிராப்டு மூலம் அனுப்ப வேண்டும்.

**மானேஜர் * கல்கி * சென்னை-600032**

# இந்த வருடத்து "சங்கீத கலாநிதி"



✗ இளம் வயதில்

"நான் டாக்டராக வேண்டும் என்று சின்ன வயசில் ஆசைப்பட்டேன். என் அப்பாவோ நான் வக்கீலாக வேண்டும் என்று எதிர்பார்த்தார். என் அம்மா மட்டும் நான் சங்கீதத்தில் புகழ்பெற்று விளங்கவேண்டும் என்று விரும்பினர். அதுதான் நிறைவேறிற்று!" என்று சொல்லிவிட்டு "அங்கே ஆபரேஷன் தியேட்டரில் அறுவை செய்வதற்குப் பதில் மேடையில் அறுவை செய்கிறேன். கோர்ட்டுக் கச்சேரிக்குப் போவதற்குப் பதில் பாட்டுக் கச்சேரிக்குப்போகிறேன். பெரிய வித்தியாசம் ஏதும் இல்லை இல்லையோ?" என்று சிரித்துக்கொண்டே கேட்டார் சேஷகோபாலன்.

அமெரிக்காவுக்கும், கனடாவுக்கும் போய்விட்டுத் திரும்பியிருந்த சேஷகோபாலன் உற்சாகமாய்க் காணப்பட்டார். இரண்டுமணி நேரத்துக்குமேல் சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருந்தார்...

**அமெரிக்காவில் கச்சேரிகள்**

இம்முறை 30 கச்சேரிகளுக்கு மேல் வேண்டாம் என்று அழைத்தவர்களிடம் சொல்லியிருந்தாராம். எல்லாமே வெற்றிகரமாக இருந்தனவாம்.

"எங்களை மேடை யேற்றியவர்கள் உண்மையிலேயே சிறந்த ரசிகர்கள். அதிலும் ஆட்டாவா, வான்குவர் ஆகிய கனடா நகரங்களில் வட இந்தியர்கள்தாம் அதிகம். கூட்டமே இருக்காது என்று சொல்லி யிருந்தார்கள். ஆனால் ஏராளமான ரசிகர்கள் வந்திருந்தார்கள். வான்குவரில் சர்தார்ஜி ரசிகர்கள் நிறைய. 'துவஜாவந்தி'யில் ராகம்-தானம்-பல்லவி பாடினேன். ராகங்களைப் பற்றிச் சொல்லிவிட்டுப் பிறகு பாடினேன். நேயர் விருப்பம் நிறையவே கேட்டார்கள்!

"அமெரிக்கர்கள் ரசித்துக் கேட்பதே அலாதியானது. தீர்மானமாக, அக்கறையோடு வந்து கேட்கிறார்கள். கற்றுக் கொள்ளவும் செய்கிறார்கள்.

"கச்சேரி ஏற்பாடு செய்பவர்கள் இந்திய இசை அறிந்தவர்கள். மேற்கத்திய ரசிகர்கள், மாணவர்கள் இருந்த இடங்களில் நமது இசையின் சிறப்பு அம்சங்கள், ராகம்-தானங்களின் அடிப்படை, கீர்த்தனைகள், கர்நாடக இசைக் கச்சேரி முறைகள் இவற்றுக்கு அவ்வப்போது விளக்கம் அளித்துவிட்டுப் பாடினேன். சான்பிரான்ஸிஸ்கோ கச்சேரியில் கண்ட நடை பல்லவிக்கு அமெரிக்கர்கள் அவ்வளவு கச்சிதமாகத் தாளம் போட்டார்கள். இன்வால்வ்மெண்ட் ஜாஸ்தி. நாற்

✗ குரு ஸ்ரீ சங்கரசிவம்



✗ திருப்புகழ் மணியின் பாராட்டு



றைம்பது. இருநூறு மைல்கள் கார் ஓட்டிக் கொண்டு வருவார்கள்.''

## இன்னொரு பிறவியிலும் இவரே குரு

சேஷ கோபாலனுக்குப் பிறந்த ஊர் நாகப்பட்டினம். (பிறந்த வருஷம் 1948). தகப்பனார் ஸ்ரீ நம்பி ஐயங்கார்; தாயார் திருவேங்கடவல்லி. 1976ல் பெங்களூரில் சேஷகோபாலனின் திருமணம். ஸ்ரீமதி சுதா சேஷகோபாலனும் ஓரளவு பாடுவாராம். ஒரே ஒரு பையன் கிருஷ்ணா. இரண்டு வயது கூட ஆகவில்லை. சங்கீதத்தில் நல்ல உணர்வு இருக்கிறது.

குரு — ராமநாதபுரம் ஸ்ரீ சங்கரசிவம். இப்போது எண்பது வயதைக் கடந்தவர். தம் குருவைப் பற்றிச் சொல்லும்போது சற்று உணர்ச்சி வசப்பட்டுப் போனார் சேஷ கோபாலன். ''அவரிடம் நான் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயம் எவ்வளவோ இருக்கிறது. கச்சேரி செய்வதைத் தொழிலாகக் கொள்ளாமல், அவரிடம் இசையின் நுணுக்கங்களைக் கற்றுக் கொள்வதற்காகவே மற்றொரு பிறவி எடுக்க வேண்டும் என்று இறைவனை எப்போதும் வேண்டிக் கொள்கிறேன்!'' பூச்சி சீனிவாச ஐயங்காருக்குப் பிறகு ராமநாதபுரம் சமஸ்தான வித்துவானாக இருந்தாராம் ஸ்ரீ சங்கரசிவம். ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதரின் சீடர்; மிருதங்க வித்வான் முருகபூபதி அவர்களின் தமையனார்.

''நான் சங்கீதம் பயின்றது கிட்டத்தட்ட குருகுல வாச முறைதான். பதினாறு வயதில் எஸ். எஸ். எல். ஸி. முடித்த பிறகுதான் முறையாகப்பயில ஆரம்பித்தேன். காலை ஆறு மணிக்குப்போனால் ஒன்பதரைவரை கற்றுக் கொள்வேன். மாலையில் கல்லூரியிலிருந்து திரும்பியதும் நேரே குருவின் வீடுதான்!'' சேஷகோபாலன் மதுரை கல்லூரி மாணவர்; பி. எஸ். ஸி. பட்டதாரி. பாடனி மேஜர்.

''சிறு வயதில் என்னுடைய தாயாரின் பக்திப் பாடல்களைக் கேட்டுத்தான் நான் இசையில் நாட்டம் கொண்டேன். பாட வேண்டும் என்கிற உணர்வை ஏற்படுத்தியதே அம்மாவின் தூண்டுதல்தான். ஐந்து வயதிலேயே ஆர்மோனியம் வாசித்தபடி பாடுவேன். ஏழெட்டு வயசிலிருந்தே பக்திப் பாடல் இன்னிசை நிகழ்ச்சிகள் செய்துகொண்டிருந்தேன். 'மதுரை பாலகன் டி. என். சேஷகோபாலன்' என்று அப்போது அச்சடிக்கப்பட்ட நோட்டீசுகள் எல்லாம் கூட அம்மா பத்திரமாய் எடுத்து வைத்திருக்கிறாள்.

''என்னுடைய பதினொருவது வயதில் ஒரு சம்பவம். வருஷா வருஷம் திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயர் திருத்தணி படி விழா நடத்திக் கொண்டிருந்தார். அந்த வருஷம் அவரால் திருத்தணியில் அதை நடத்த முடியவில்லை. அதனால் ஜனவரி முதல் தேதியன்று அவர் வீட்டிலேயே பஜனை வைத்தார். என்னை அவர் வீட்டுக்குச் சிலர் திருப்புகழ் பாட அழைத்துக்கொண்டு போனார்கள். நான் திருப்புகழ் பாடப் பாட, அந்தப் பெரியவர் சந்தோஷத்தில் மனம் உருகிப் போய் விட்டார். காஞ்சிப் பெரியவர் அவருக்கு ஒருசமயம் அளித்த பொன்னாடையையும், கௌரிசங்கர ருத்திராட்சத்தையும் அப்படியே எனக்குப் பரிசாகத் தந்து விட்டார் அன்றைக்கு! இந்த இரண்டும் என்னிடம் பத்திரமாக இருக்கின்றன.

''எனது பதினைந்தாவது வயதில் — நான் பத்தாவது வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும் சமயம். கும்பகோணத்தில் ஒரு பக்திப் பாடல் நிகழ்ச்சியில் பாடினேன். கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் தான் தலைமை வகித்தார். ''இவ்வளவு இயற்கையான அம்சம் இருக்கிற பாடகர், முறையாகக் கற்றுக்கொண்டு நல்ல கலைஞராக உருவாகி விட்டால் இசை உலகத்துக்கே ஒரு சிறந்த வித்துவான் கிடைக்க வழிசெய்ய முடியும்!'' என்று பாராட்டிப் பேசியதோடு நிற்காமல், அவரே நான் குரு ஸ்ரீசங்கரசிவம் அவர்களிடம் சங்கீதம் கற்க வேண்டும் என்று தெரிவித்தார். ராமேசுவரம் கோடூர் ராஜகோபால சாஸ்திரி (என் மீது மிகுந்த அக்கறையுள்ள என் குடும்ப நண்பர்) என் குருவிடம் சொண்டு போய் என்னைச் சேர்த்தார். இன்று நான் இந்தத் துறையில் பிரபலமாக விளங்க இந்த மூவரும் தான் காரணம்.''

## இசையும் இளைஞர்களும்

''பெரிய நிறுவனங்களில் ஸ்போர்ட்ஸ் மென்களை வேலைக்கு வைத்துக் கொண்டு ஆதரிக்கிறார்கள் என்றால், நம் கலை—கலாசாரத்தைப் பரப்புகிறவர்களாக விளங்கும் இசைக்கலைஞர்கள் எந்த விதத்தில் குறைந்து போய் விட்டார்கள்? சங்கீதம் கற்றுக் கொண்டால் நமக்கு அதனால் வாழ்க்கையில் பலன் உண்டு என்ற நம்பிக்கை,

''நம் நாட்டில் அரசியல்வாதிகளின் ஆக்கிரமிப்புகளுக்கு ஒரு எல்லையே கிடையாதா?''

''ஏன் கிடையாது? வடக்கே இமய மலை, கிழக்கே வங்கக் கடல், மேற்கே அரபிக் கடல், தெற்கே கன்யாகுமரி''

—நெல்லை கவாஜி



எல்லை உண்டு

கரகரப்பு கரைஞ்சு போகுது!

தொண்டையிலே கரகரப்பு என்றால் தொல்லை மிகக
கடுமைதான். யாரையுமே பாதிக்கும் இது நம்மைப்
பிடிக்கும் வழிகளோ ஏராளம். புகை, தூசு, எண்ணெய்
மிகுந்த கார உணவு, குறிப்பாக ஐஸ் க்ரீம் மற்றும்
குளிர்ந்த பானங்கள். கரகரப்பின் முதல் அறிகுறி
தோன்றும்போதே ஸ்ட்ரெப்ஸில்ஸ் சாப்பிடுங்கள்.
ம்ம்ம்... இது சுவைமிக்கது. இது கரைந்து
போகும்போதே வேலையைத் தொடங்குகிறது.
தொண்டைக்கு இதமளிக்கிறது. வாயில் புத்துணர்ச்சி
திகழச் செய்து சுத்தமாக வைக்கிறது.

சுவையுடன் சுகமளிக்குது

# ஸ்ட்ரெப்ஸில்ஸ்

தொண்டைக் கரகரப்புக்கு சுவையான சிகிச்சை

4 இன்சுவைகளிலே: ஆரஞ்சு, லெமன், ஜிஞ்ஜர்-லெமன் மற்றும் ரெகுலர்.



CASBS-112-203 TAM

பயிலுகிறவருக்கு வரவேண்டும். அப்படி இருந்தால் நிறைய இளைஞர்களை இதில் ஈர்க்க முடியும். நான் கல்லூரியில் படிக்கும் இளைஞர்கள் நிறையப் பேரைச் சந்திக்கிறேன். அவர்களுக்கு ஆர்வம் நிச்சயமாக இருக்கிறது. கற்றுக் கொள்ளும்போதே வயிறு வாடாத நிலையும், சாதகம் செய்யச் சரியான சூழ்நிலையும் உருவானால் பாதுகாப்பு நிறைந்த தன்னம்பிக்கை துளிர் விடும், கலை சிறக்கும். இளைஞர்களுக்குக் கொடுக்கப்பட்டு வரும் கல்சரல் ஸ்காலர் ஷிப்பில், இசையைத் தொழிலாகக்கொள்ள விரும்புவோருக்குத் தனியாக ஒரு பகுதி ஒதுக்கப்பட வேண்டும்'' என்று கூறும் சேஷ கோபாலன் இவ்வளவு இளம் வயதில் 'சங்கீத சூடாமணி' விருது பெறுகிறார் சென்னை கிருஷ்ண கான சபாவில். இந்த வருஷ கோகுலாஷ்டமி சீரிஸ் இளம் கலைஞர்களுக்காம்.

''இனி, இளைஞர் சமுதாயத்தில் நிறைய இசைக் கலைஞர்கள் வரவேண்டும் என்ற வகையில் தான் இந்தப் பாராட்டையும் கௌரவத்தையும் ஏற்றுக் கொள்ளுகிறேன்; அல்லாமல் தனிப்பட்ட முறையில் சேஷ கோபாலனுக்குக் கொடுத்த பட்டமாக நான் இதை நினைக்கவில்லை.''

## அறுவைகள் அநேகம்



- விக்ஸ் 44 சாப்பிட்டால் இருமல் போகும்! 22 சாப்பிட்டால் என்ன ஆகும்?' விடை: ஒருமல்தான் ஸார் போகும்!
- தூறல் நின்னு போச்சுக்குப்பிறகு பாக்யராஜ் என்ன படம் எடுப்பார்?
  விடை: கொடையை மடக்குங்க ஸார்!
- சிகரெட் பிடிக்க முடியாத நடிகர் யார்?
  விடை: ஒரு விரல் கிருஷ்ண ராவ்!
- சிவாஜி முதன் முதல் நடித்த படம் எது?
  விடை: தமிழ்ப் படம்!
- இந்திரா காந்தியைக் காலையிலே பார்க்க முடியாதாமே ஏன்?
  விடை: அவர்தான் பி. எம். ஆச்சே!

—ஆர். பானு

வீணையைப் பற்றிப் பேச்சு வந்தபோது, சொன்னார்: ''வீணை வாசிக்கத் தொடங்கிய பிறகு, வாய்ப்பாட்டுப் பாடுவதிலேயே நிறைய நுணுக்கங்களும் மாற்றங்களும் மனத்தில் பட்டது. நல்ல வாய்ப்பாட்டு ஞானம் உள்ளவர்தான் நல்ல வீணை வித்துவானாகப் பரிமளிக்க முடியும். அதே போல் வீணை தெரிந்த வாய்ப்பாட்டுக் காரரின் திறமையும் தனியானது. ஞானமும் அதிகமாக இருக்கும் அவரிடம்!''

### சிந்தனைத் துளிகள்...

''கோயமுத்தூரில் வருடா வருடம் நடைபெறும் ராமநவமி உற்சவம் பிரபலமானது. அங்கே ஒருமுறை பாடினேன். என் பாட்டைக் கேட்ட திரு. லால்குடி ஜெயராமன், சென்னையில் கிருஷ்ண கான சபா செயலாளர் திரு. யக்ஞராமனிடம் சொல்லி, 'ரொம்ப நன்றாகப் பாடுகிறார் இந்த இளைஞர். இங்கே நமது சபாவில் அவர் கச்சேரி வையுங்கள்; நானே வயலின் வாசிக்கிறேன்!' என்றார். அப்படி மற்ற சீனியர் பக்கவாத்தியக்காரர்கள் எனக்கு வயலினும் மிருதங்கமும் வாசித்ததன் காரணமாகவே நான் பிரபலமானேன். அவர்கள் என்னை உயரே தூக்கி விட்டார்கள். அதனால் மற்றவர்கள் தாண்ட வேண்டிய பல சிரமமான படிகளை நான் தாண்ட வேண்டிய அவசியம் இருக்கவில்லை.

''சங்கீத வித்துவான்கள் சங்கம் தேவைதான். எங்களைப் போன்ற கலைஞர்களுக்கு இளைய தலைமுறையைச் சேர்ந்தவர்களை நம் இசையைக் கேட்கத் தயார் செய்ய வேண்டிய முக்கியப் பொறுப்பு இருக்கிறது. இன்றைக்கு 200 பேர் கச்சேரி கேட்க வந்தால் அதில் பத்து – இருபது பேர்தான் இளைஞர்கள். இவர்கள்தாம் பிற்காலத்தில் தொடர்ந்து எங்கள் கச்சேரியைக் கேட்க வரப்போகிறவர்கள். இப்படி ஆடியன்ஸ் இருந்தால் பாடுகிற எங்களுக்கு எப்படி இருக்கும்? ஏதோ பயம் இந்த இளைஞர்களிடத்தில் இருக்கிறது. சங்கீதம் கேட்க வேண்டும் என்ற பழக்கம் இளைஞர்களிடையே உண்டாக்க வேண்டும். கர்நாடக இசை கேட்பதற்கு, அவர்களுக்கு இன்னும் வாய்ப்புகள் அளிக்க வேண்டும்.

''மற்ற பணிகளில் பென்ஷன் இருப்பது போல, வயதான வித்துவான்களுக்கு, வாழ்க்கையைச் சிரமமின்றி நடத்த, நிதியுதவி செய்ய வேண்டும். இதற்காகவேனும் சங்கீத வித்துவான்கள் சங்கம் அமைத்து, ஏற்பாடுகள் செய்தால் நன்றாயிருக்கும்.''

பேட்டி: சாருகேசி

வண்ணப்படம்: 'சுபா'

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

